Regd : No. TN - MS C/ 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS Phone 420212 8 பக்கம் விலை 60 காசு
POST WITHOUT PRE - PAYMENT LICENCE NO G 6 - TN MS (C/ P. P 55



**வழக்கறிஞர்**

நாட்டிற்குப் பயன் படும் வகையில் வழக் கறிஞர்கள்கட்டாயமாக உழைக்க வேண்டும்.

- பேரறிஞர் அண்ணா

# அண்ணா

**நிறுவனர்: எம்.ஜி.ஆர்**

**முறைகள்**

கால நிலைக்கும், சமுதாய நிலைக்கும் அறிவு முதிர்ச்சிநிலைக், கும் ஏற்றபடி தான் முறைகள் வகுக்கப்பட வேண்டும்,

-தந்தை பெரியார்



மலர் : 9 சென்னை 7-12-1984 வெள்ளி ★ ★ ★ வெளியூர் 8-12-1984 சனி இதழ் 51

# ஃ புரட்சித்தலைவரின் புது எழிற்கோல புகைப்படங்களால் தமிழகமெங்கும் உற்சாகப் பெருக்கு!

# ஃ "புரட்சித்தலைவரை மீண்டும் அரியணை ஏற்றுவோம்" என்ற தமிழக மக்களின் உறுதி கண்டு

# கருணாநிதி கலக்கம்

# தோல்வி பயத்தால் புரட்சித்தலைவர்மீது புழுதி வாரித் தூற்றும் தி.மு.க. இழிசெயல்!

**சென்னை, டிச. 7- இதயதெய்வம் புரட்சித்தலைவர் நன்றாக உடல்நலம் தேறி இருப்பதைக்கண்ட தமிழகம் உற்சாகம் கொண்டிருக்கிறது. எதிர்க்கட்சி அந்தஸ்தாவது கிடைக்குமா என்கிற அச்சத்தில் உள்ள கருணாநிதி விரக்தியினால் புரட்சித்தலைவரைப் பற்றி அவதூறு பேசி வருகிறார்.**

அமெரிக்காவில் எடுக்கப்பட்ட புரட்சித் தலைவரின் 3 புகைப் படங்களை அமைச்சர் ஆர். எம். வீ. நேற்று வெளியிட்டார்.

புரட்சித்தலைவர் தற்போது எப்படி இருக்கிறார் என்பதை அறிய தமிழகமே ஆர்வத்தால் துடித்துக் கொண்டிருப்பதை உணர்ந்தஅத்தனை பத்திரிகைகளும் புரட்சித் தலைவரின் படங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து பிரசுரித் துள்ளன.

புரட்சித்தலைவர் நல்ல நிலையில் இருப்பதைக் கண்டு தமிழகமே மகிழ்ச்சி கொண்டுள்ளது.

"எங்கள் பிரார்த் தனைவீண்போகவில்லை" என்று தாய்மார்களும் பெரியவர்களும் மகிழ்ச்சி யுடன் கூறுகிற காட்சி உள்ளத்தை உருக்குவதாக உள்ளது.

மீண்டும் புரட்சித் தலைவரை முதல்வராக்க தமிழகமக்கள் உறுதி பூண்டு விட்டார்கள் என்பதை உணர்ந்து கொண்ட கருணாநிதி கலக்கம் அடைந்துள்ளார்.

இதைத் தொடர்ந்து புரட்சித்தலைவர் மீது ஆத்திரம் கொண்டுள்ளார் கருணாநிதி.

"எம். ஜி. ஆருடன் உள்ள எனது 40 ஆண்டு கால நட்பு மேலோங்கி நிற்கிறது."

என்று கூறியகருணாநிதி மீண்டும் வேதாளம் முருங்கைமரம் ஏறியது... என்பார்களே அப்படி, புரட்சித்தலைவர் பற்றி அவதூறு பேச முற்பட்டு விட்டார்.

புரட்சித்தலைவரைக் கேவலமாகத் திட்டி கருணாநிதியின் ஏடுகளும் எழுதத்தொடங்கி விட்டன! கழகத்தின்வெற்றிவாய்ப்பு தகத்தகாயமாய்ப் பிரகாசிக்கிறது! கழகத் தோழர்களின் பணி முன்பை விட மேலும் சீரும், சிறப்பும் அடைந் துள்ளது.

இன்றைய 'அண்ணா'
8 பக்கம்
60 காசு



நன்றி தாயே! நன்றி!! நன்றி ஓராயிரம் கோடி!!

# பிரார்த்தனைகள் பலித்தன

## உங்கள் பாத கமலங்களில் சிரம் சாய்த்து வணங்குகிறோம்!

இதோ... இந்தப்படம்... இதுபடம் இல்லை - ஒருவரலாறு - நம் தேவனின் இந்தப்படம் தான் - மைதானத்தில் இருந்த நம்மை மண்டபத்திற்கு அழைத்துச்சென்று கொலுவீற்றிருக்கச் செய்தது.

தமிழக அரசியல் திசை வழிப்போக்கை நிர்ணயித்த - நிர்ணயிக்கிற- எப்போதும் நிர்ணயிக்கப் போகிற ஜீவ ஊற்று நம்தேவனே.

(2-ம் பக்கம் பார்க்க)






# கழகத்தின் காவல் தெய்வங்களே!

**உங்கள் உழைப்பை நம்பித்தான் நமது வேட்பாளர்களும் நமது கூட்டணி வேட்பாளர் களும் தேர்தல் களத்தில் நிற்கிறார்கள்!**

**பாய்ந்து வரும் புலியானாலும் கலங்காது களம் நின்று வெற்றி கொள்ளும் திறம் படைத்த உங்கள் திறமையை நான் குறைத்து மதிப்பிடவில்லை!**

*நம் தங்கத்தலைவன் நாட்டில் இல்லாத வேளை ... அவர் இருந்தால் காட்டும் ஆர்வத்தை விட பன்மடங்கு கூடுதலாக இருக்க வேண்டும்! கழகத்தின் அடிமட்டத்தில் உள்ள உங்கள் இடத்தில் அந்த ஆர்வம் பெருகியுள்ளதை உணர் கிறேன்! ஆனால் சிலர் தாங்கள் செய்யும் தவறு களால் கழகம் எந்த அளவிற்கு பாதிக்கப்படும் என் பதை உணராது, படுபாதகச் செயல்களில் ஈடுபட்டு உள்ளது வேதனையாக உள்ளது.*

*திருந்தமாட்டார்களா? என்று காத்திருந்த பின்னால் சிலர் மீது நடவடிக்கை எடுக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது. இந்தப் பட்டியலில் இடம் பெற வேண்டியவர்கள் இன்னும் உள்ளனர். சில முக்கிய பொறுப்பில் உள்ளவர்கள் கூட கழகத் திற்குத் தீங்கு விளைவிக்கும் தீயவர்களாகிவிட்டார் களே என்று எண்ணி கண்ணீர் வடிக்கிறேன். இவர் களாவது காலம் கடக்கும் முன்னர் திருந்த மாட்டார்களா என்று ஏக்கப் பெருமூச்சோடு காத்திருக்கவேண்டியுள்ளது!*

**அதிகாரபூர்வமாக அறிவிக்கப் பட்ட வேட்பாளர்களை எதிர்த்து, எந்தக் காரணத்திற்கோ, போட்டி யிடுவதை- அல்லது போட்டியிடு வோருக்குத் துணைபோவதை-**

2-ம் பக்கம் பார்க்க



**எம். ஜி. இராமச்சந்திரன்**
முதலமைச்சர்
புனித ஜார்ஜ் கோட்டை,
சென்னை-600 009.

முதலமைச்சரால் சென்ற ஆண்டு வழங்கப்பட்ட

# கொடிநாள் செய்தி

ஆண்டுதோறும் டிசம்பர் 7-ந்தேதியன்று கொண்டாடப்படும் "கொடிநாள்" நமதுதேசிய வாழ்வின் பெருமிதமிக்க நாளாகும். நாட்டு மக்கள் அனைவரும் அச்சமின்றி, பாதுகாப்புடன் வாழ்ந்திட தங்களது சுக வாழ்வையும், வசதிகளையும் உதறி எறிந்து, கடலிலும், வானிலும், பனி மூடிய மலை முகடுகளிலும் கண் துஞ்சாது கடமையாற்றி நாட்டைப் பாதுகாக்கும் முப்படை வீரர்களைப் போற்றிப் பாராட்டவும், அவர்களது செயற்கரிய பெருஞ் செயல்களை நினைவு கூர்ந்து நன்றி கூறவும் "கொடிநாள்" நமக்கெல்லாம் நல்லதொரு வாய்ப்பாகும். போர்க்காலங்களிலும், அமைதிக்காலங்களிலும் நாட்டுப் பணிக்குத் தங்களை முழுமையாக ஒப்படைத்துக் கொண்ட முன்னாள் ராணுவ வீரர்களின் குடும்பங்களைக் காத்திடவும், வீர மரணம் எய்திய போர் வீரர்களின் குடும்பங்களுக்கு இயன்ற உதவிகளை அளிக்கவும் "கொடி நாள்" அன்று நாம் மனமுவந்து அளிக்கும் நன்கொடைகள் பயன்படுகின்றன.

பெருமைமிக்க பாரம்பரியத்துக்கு சொந்தக் காரர்களான நமது முப்படை வீரர்களின் தன்னலமற்ற தியாகத் தொண்டினைப்பாராட்டு கின்ற வகையில் படைவீரர் சேமநல நிதிக்கு நன்றி உணர்வோடும் உற்சாகத்துடனும் நன்கொடை அளித்திட வேண்டும் என மக்கள் அனைவரையும் அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

அன்பு
எம்.ஜி.ஆர்

தமிழ்நாடு முதலமைச்சர்

# பிரார்த்தனை பலித்தன

(முதல் பக்கத் தொடர்ச்சி)

**நமது தலைவனின் வெளிச்சத்திலே ஒளியூட்டப் பட்டவர்கள் நாம்.**

**அகில இந்தியாவிலும்-அத்தனை பத்திரிகைகளிலும் இன்றைக்கு- அமெரிக்க நாட்டில் புரட்சித்தலைவர் வெகுவாகத் தேறி வருகிற காட்சிகளைக் கண்டு குதூகலம் அடைந்து இருக்கிறார்கள்.**

"என்னை எப்போதும் வாழ வைக்கிற என் வணக்கத்திற்குரிய தாய்க்குலமே" -என்ற புரட்சித்தலைவரின் திருவாக்கு மகிமையை... இதோ உலகம் உணர்ந்து கொண்டது.

**நினைத்தாலே நெஞ்சம் நெகிழ்கிறது. உடல் புல்லரிக்கிறது. கண்களில் இனம்புரியா ஆனந்தப் பிரவாகம் பெருக்கெடுக்கிறது.**

இதோ... எங்கள் இனிய தலைவர் - எங்களை வாழ வைக்கிற தெய்வம் புன்னகை புரிகிறார். எங்கள் தாயாம் ஜானகி அம்மையாருடன் உரையாடுகிறார். டாக்டர்களுடன் கை குலுக்குகிறார். பத்திரிகை படிக்கிறார். எப்போதும் அவரை பற்றியே நினைத்துக் கொண்டு இருக்கும் நம்மைப்பற்றி விசாரிக்கிறார்-இவையெல்லாம் இப்படித்தான் நடக்கும் என்று நமக்குத் தெரியும்-

**தர்மம் காக்கும். சத்தியம் ஒளிவிடும். தங்கத் தலைவனது செம்மையான இதயத்திற்கும், கிருபைக்கும் எந்தக் குறைவும் வாராது என்று நமக்குத் தெரியும்.**

**இருந்தும் கூட...எதேதோ நினைவுகள், சங்கடங்கள்.**

**அக்டோபர் 5-ந் தேதிக்குப் பிறகு தமிழகமே உறங்கவில்லை.**

**இப்போது நிம்மதிப் பெருமூச்சு விடுகிறோம்.**

நமது தேவனின் கிருபை வானளாவியது. அவரது சத்தியம் மேக மண்டலங்கள் பரியந்தம் எட்டியிருக்கின்றது.

அவரது நீதி மகத்தான பர்வதங்கள் போலவும், அவரது நியாயங்கள் மகா ஆழமாகவும் இருப்பதை மனுஷ ஜாதி அறியும்.

**அதனாலே அவருக்கு யாதொரு குறைவும் வாராது என்பதை உள் மனம் சொன்ன போதும்- ஆன்மா அறிவுறுத்திய போதும் - ஏதோ புரியாத அச்சம்.**

அந்த அச்சம் போயிற்று. சத்தியத்திற்குச் சாவில்லை. தர்மத்திற்கு எந்தத் தலைமுறையிலும் மரணமில்லை என்பதை உலகம் மீண்டும் ஒரு முறை உணர்ந்தது.

**மகிழ்ச்சிப் பெருக்கால். .. நன்றியுணர்வின் மேலீட்டால் எங்கள் அன்னையரே ... எனக்கு வார்த்தைகள் வரவில்லை.**

எங்களுக்கு இன்னுயிர்தந்து, எமை ஈன்று வளர்த்து அருள் ஈந்த தமிழ்ப்பெருங்குடி தாய்க்குலமே... நீங்கள் கடந்த இரண்டு மாதகாலமாக செய்த பிரார்த்தனைகள் பலித்ததம்மா ...

தாய்மாரே, எங்கள் தவப்பயனே ... பொன்மனச் செம்மலாம் புரட்சித்தலைவர் மீது நீங்கள் காட்டி வருகிற அன்பிற்கு எதைக் காணிக்கையாக்குவோம்?

எங்களை வாழ வைக்கிற தாய்மார்களே ... 1967-ல் அன்றைக்கு- ஆலாலகண்டன் தொண்டையில் குண்டைத் தாங்கி - ரத்தம் சிந்திய அந்த ஜனவரி 12-ல் ... எங்களை ஈன்றமுதாட்டித் தழுவிய எங்கள் உயிரினும் இனிய தாய்மாரே - புரட்சித்தலைவரின் உயிருக்காக நீங்கள்மடிப்பிச்சை ஏந்திய காட்சியை - அந்தக் கருணையை - அந்தப் பாசத்தின் சிகரத்தை எத்தனை யுக யுகாந்திரமானாலும் மறக்க முடியுமா?

அன்றைக்கும் உங்கள் பிரார்த்தனை பலித்தது. 1967-ஜனவரி-13ந் தேதி மாலை 4-30 மணி அளவில்- "இனி எம். ஜி. ஆர். உயிருக்கு ஆபத்தில்லை" என்று டாக்டர்கள் அறிவித்தனர்.

தமிழகம் செய்த தவப் பயனால் அன்னை சத்தியாவின் வயிற்றில் பிறந்த அந்த மாமனிதர்-அன்றைக்கு-உங்கள் பிரார்த்தனையால் உயிர்த்தெழுந்தார்.

**இன்றைக்கும் தாய்மாரே...**

நல்ல உள்ளம் படைத்த கோடானு கோடிப் பேரின் பிரார்த்தனைகள் பலித்ததம்மா !

## ஓ...நினைத்தாலே...!

**கோயில்களில், தேவாலயங்களில், மசூதிகளில், கடந்த இரண்டுமாத காலமாக நடந்தபிரார்த்தனைகள் அத்தனையும் அவருக்காக !**

அத்தனை ஆலயங்களிலும் ஒலித்த மணியோசைக்குப் பலனை... இதோ பார்க்கிறோம்...புரட்சித்தலைவர் புன்னகை செய்கிறார்.

''நாலாயிரம் காதம் விட்டகல்'' என்று காலனை ஒரு சிறு புல்லென மதித்து பீதாமகன் மகாகவி பாரதி பாடிய பாட்டின் முழுப்பொருளைப் பார்க்கிறோம்.

தாயே,

அன்றைக்கு ஆட்சிக்கு நாம் வர-அவர் ரத்தம் சிந்தினார். இன்றைக்கு ஆட்சி மாட்சி பெற உழைத்து உழைத்து...இதோ...அந்தப் படத்தை உற்றுப் பாருங்கள், எத்தனையோ ஆயிரம் விஷயங்களை அந்தப் படம் சொல்லிக் கொண்டே இருப்பதைப் பாருங்கள். தாயே பாருங்கள்!

அனைவரின் பிரார்த்தனையின் பலிதப்பொருளாய்... இதோ... நம் புரட்சித்தலைவர் ஆலயங்களில் காணுகிற சம்பூரணப் பொலிவோடு தேறி வருகிற காட்சியைப் பார்க்க கொடுத்தவாய்ப்பை இறையருளைப்போற்றி புகழ்வோம். துள்ளுவோம். துதிபாடுவோம்.

**எங்கள் அன்னையரே, தமிழ்ப் பெருமக்களே, மத, மொழி, இனம், கடந்த இதயம் படைத்த மனிதநேய சிகரங்களே!**

உங்கள் அனைவரின் பாதக் கமலங்களில் எங்கள் சிரம் சாய்த்து வணங்கி நன்றி கூறுகிறோம்.

பிரார்த்தனை பலித்தது' நன்றி அம்மா! நன்றி! ஓராயிரம் கோடி நன்றி!

சிறு வயது முதலே அவர் நமக்கு போதித்து வந்தார். இன்றைக்கு அவருடைய அதிசயங்களை உலகிற்கு நாம் அறிவிக்கிறோம்!

**அத்தனைக்கும் நீங்களே காரணம்.**

**இதோ...நமது தேவன்... தாயகம் திரும்பி வருகிற நாட்கள் கண்ணுக்குத் தெரிகின்றன.**

மேடையில் ஒரு மின்னல் தோன்றுமே.. தாவி ஏறி... இரண்டு ஒலிபெருக்கிகளைக்கைகளில் தாங்கி சுற்றிச் சுற்றிப் பலமணி நேரம் நம்மை மகிழ்வித்த அந்ததங்கநிகர்த்தலைவன் மீண்டும் வந்து மேடைகளில் மீண்டும் அந்த மின்னல் தோன்றும் நாள் இதோ சமீபித்துவிட்டது.

**எம் தலைவர் என்றைக்கும் முதல்வர். அவர் எப்போதும் எங்களுக்காக ராஜாங்கம் நடத்துவார் என்பதை வரும் டிசம்பர் 24ஆம் நாள் உறுதிசெய்வோம்.**

**நமது தேவனின் நீதி உன்னதமானது. பெரிதானவற்றை அவர் செய்தார். அவருக்கு நிகரானவர்-உண்டா?-உண்டு! அது-அவரே!**

**எங்கள் தேவனே, இந்தச் சந்ததிக்கு உமது வல்லமையையும், வரப்போகிற அனைத்து சந்ததிக்கும் உமது பராக்கிரமத்தையும் அறிவிக்க எங்களுக்கு எப்போதும் வழிகாட்டுவாய்!**

கார்த்தி

9-ந் தேதி முதல்

# தமிழகம் முழுவதும் சிவாஜிகணேசன்எம்.பி. தீவிர பிரச்சாரம்

சென்னை, டிச. 7- கழகம், இந்திரா காங்கிரஸ்கூட்டணி வேட்பாளர்களை ஆதரித்து தமிழ்நாடு முழுவதும் 9-ந் தேதி முதல் சிவாஜி கணேசன் எம்.பி. சுற்றுப்பயணம் செய்து பிரச்சாரம் செய்கிறார்.

தமிழ் நாடு இந்திரா காங்கிரஸ் பிரச்சாரக் குழுவின் தலைவரான சிவாஜிகணேசன் எம்.பி. சென்னையில் நிருபர்களுக்குப் பேட்டி அளித்தார்.

அப்போது அவர் கூறியதாவது:-

தமிழகத்தில் இந்திரா காங்கிரஸ், அனைத்திந்திய அண்ணா தி. மு.கழக கூட்டணியை வெற்றி பெறச் செய்ய, நான் தமிழ்நாடு முழுவதும் சுற்றுப் பயணம் செய்ய இருக்கிறேன்.

## புயல் வேகம்

வரும் 9-ந் தேதி சென்னையிலிருந்து தேர்தல்பிரச்சார சுற்றுப் பயணத்தை தொடங்குகிறேன். இம்மாதம் 21-ந் தேதி வரை சுற்றுப் பயணம் செய்வேன். என்னுடன் பத்திரிகையாளர்களையும் அழைத்துச் செல்லவிருக்கிறேன்.

இவ்வாறு சிவாஜிகணேசன் எம்.பி. கூறினார்.

வருமானவரிக்குபயந்துதான் நீங்கள் உங்கள் ராஜினாமாவை வாபஸ் பெற்றதாக கூறப்படுகிறதே? என்று ஒரு நிருபர் கேட்டதற்கு சிவாஜிபதில் கூறினார்:

## வருமான வரிபயமா?

அப்படிவருமானவரிக்குப் பயந்தால், இந்தியாவில் உள்ள எல்லா குடிமகனும் இந்திரா காங்கிரஸ் காரர்களாக தான் இருக்க வேண்டும். வருமான வரியைப் பொறுத்தவரை வசதிஉள்ளவர்கள்உடனே கட்டமுடியாமல் போனாலும் அவகாசம் கேட்டு அடுத்த மாதத்தில் கட்டி சமாளித்து விடலாம்.

நான் வருமான வரிக்கு பயந்து இருந்தால், காமராஜருடன் அவரது காங்கிரஸ் கட்சியில் அவருடன் கடைசிவரை இருந்து இருப்பேனா?

இவ்வாறு சிவாஜி கணேசன் எம்.பி. பதில் அளித்தார்.

# ஆதித்தனார் துணைவியார் கோவிந்தம்மாள் மறைவு

சென்னை, டிச. 7- பத்திரிகைஉலக ஜாம்பவானும், முன்னாள் அமைச்சருமான மறைந்த ஆதித்தனாரின் துணைவியார், கோவிந்தம்மாள் வயது (69) இன்று காலை 6.30 மணிக்கு சென்னையிலுள்ளதனியார் மருத்துவமனையில் காலமானார்.

அன்னாரின் உடல் பொது மக்கள் பார்வைக்காக அடையாறு காந்திர் கிரசென்ட் பார்க்கருகிலுள்ள அவரது இல்லத்தில் வைக்கப்பட்டுள்ளது. இறுதிச் சடங்குகள் இன்று மாலை பெசன்ட் நகர் இடுகாட்டில் நடைபெறுகிறது.

மறைந்தஅம்மையாருக்கு ராமச்சந்திரஆதித்தன், சிவந்தி ஆதித்தன் ஆகியோர் மகன்கள் ஆவர்.

# டாக்டர்களை களங்கப்படுத்தும் கருணாநிதி ஆணவம்

## அமைச்சர் அண்டே தாக்கு

மதுரை, டிச. 7- புரட்சித்தலைவர் உடல் நிலை குறித்து விசாரிக்க கமிஷன்அமைப்பேன் என்று கருணாநிதி கூறுவது மருத்துவர்களையே களங்கப்படுத்துவதாகும் என்று அமைச்சர் அண்டே கூறினார்.

புரட்சித்தலைவர் போட்டியிடும் ஆண்டிப்பட்டி தொகுதியில் அமைச்சர் அண்டே நேற்று (6-ந் தேதி) பிற்பகல் வீடுவீடாகச் சென்றுமக்களை சந்தித்து வாக்குக் கேட்டார்.

## கருணாநிதி ஆணவம்

ஆண்டிப்பட்டித் தொகுதி தலைமைத் தேர்தல் அலுவலகம் முன் நடைபெற்ற பிரமாண்ட கூட்டத்திலும் அமைச்சர் அண்டே பேசினார்.

அவர் பேசுகையில் கூறியதாவது:-

கருணாநிதி தான்தான் அடுத்த முதல்வர் என்ற நினைப்பில் ஏதேதோ பேசுகிறார். எந்த காலத்திலும் இனி கருணாநிதி முதல்வராக முடியாது.

புரட்சித்தலைவர் உடல் நிலை குறித்து விசாரிக்க கமிஷன் அமைப்பேன் என்று ஆணவமாக கருணாநிதி பேசுகிறார். கருணாநிதியின் ஆணவப் பேச்சுக்கு புரட்சித் தலைவரேவந்து பதில் சொல்வார். கருணாநிதிஇப்படிப்பேசுவதன்லமும் மருத்துவர்களையே களங்கப்படுத்துகிறார்.

இவ்வாறு அமைச்சர் அண்டேபேசினார்.

# ப. உ. ச. கடிதம்...

(முதற்பக்கத் தொடர்ச்சி)

## அறவே தவிர்க்க வேண்டுகிறேன்!

**பாலுக்கு சண்டை போட்டு பசுவைக்கொன்று விடக்கூடாது!**

பதவிக்குச் சண்டை போட்டுக்கொண்டு கழகத்தை அழித்து விடக்கூடாது.

**கழகத்தைக் கட்டிக் காக்க வேண்டியவர்கள் வெட்டி சாய்க்கும் முயற்சியில் ஈடுபட்டிருப்பது எந்தக் காலத்திலும் மன்னிக்க முடியாததாகும்!**

**இன்னும் காலம் கடந்து போகவில்லை! யோசிக்கும்படி வேண்டுகிறேன்.**

பங்காளிகள் சண்டை போட்டுக்கொண்டால், வக்கீல்கள் பணக்காரர்களாவார்கள்! அதுபோல் நம்மிடையே பகைதோன்றி விட்டால் எதிரிகளுக்குத் தானே இலாபம்?

தனிப்பட்ட கோபதாபங்களை, ஆசாபாசங்களை வளர்த்துக் கொண்டு வஞ்சகர்களாக மாறிடத்தான் வேண்டுமா?

மொத்தத்தில் தேர்தல் களம் நமக்குச் சாதகமாகத்தான் உள்ளது. என்றாலும் சில இடங்களில் தோன்றியுள்ள பேதங்கள் எந்த அளவிற்கு பாதகமாக அமையும் என்பது தெரியவில்லை!

**புரட்சித்தலைவ[illegible] இதயத் துடிப்புகளாக உள்ள[illegible] செயல் வீரர்களே! வெற்றியை ஈட்டித்தர உழையுங்கள்!**

பருவத்துக்குப் பருவம் இலைகள் உதிரும்! ஆனால் எப்போதும் நிலையாக உள்ளது வேர்கள் தான்.

**ஆற்றல் மிகு மறவனே! துவக்கிடு...மன்னிக்கவும்..முடுக்கிடு. இருக்கும் நாட்கள் குறைவு. இப்போதிலிருந்து வெற்றிக்கனிக்காக வியர்வையில் குளித்திடப் புறப்படு! நம் தானைத் தலைவனுக்கு நீங்கள் தரும் பரிசு அது ஒன்றுதானே !**

அன்புள்ள

**ப. உ. ச.**

அறந்தாங்கி தொகுதியில் அமைச்சர்

# திருநாவுக்கரசுக்கு தாய்க்குலத்தினர் ஆரத்தி-வரவேற்பு

புதுக்கோட்டை, டிச. 7- புதுக்கோட்டை மாவட்டம் அறந்தாங்கி தொகுதியில் அமைச்சர் திருநாவுக்கரசுவை மக்கள் ஆரவாரத்துடன் வரவேற்றனர், தாய்குலத்தினர் ஆரத்திஎடுத்து வரவேற்றனர்.

அறந்தாங்கிநகரில்பிரச்சார தலைமைப் பணிமனையை அமைச்சர் திறந்து வைத்தார்.

அறந்தாங்கி தொகுதியில் கூத்தாடிவயல், குருந்திரா கோட்டை, எருக்கலக் கோட்டை, காக்காநாடு, ராஜேந்திரபுரம் பூவத்திக்குடி, மாங்குடி ஆகிய கிராமங்களில் அமைச்சர் திருநாவுக்கரசு வாக்கு சேகரித்தார்.

எல்லா இடங்களிலும் மக்கள் உற்சாகமாக வரவேற்றனர், தாய்மார்கள் ஆரத்தி எடுத்தனர்.

எங்கள் ஓட்டு இரட்டை இலைக்கே என்று வழியெங்கும் கோஷம் எழுந்தது.

அறந்தாங்கி நகரில் தலைமைப் பணிமனையை திறந்து வைத்து அமைச்சர் திருநாவுக்கரசு பேசியதாவது :-

ராஜீவ் காந்தியே மீண்டும் பிரதமராக வரவேண்டும். அப்போது தான் நாடு பிளவு படாமல் இருக்கும்.

### உழைக்கும் உத்தமர்

தமிழகத்தில் புரட்சித் தலைவர் மீண்டும் முதல்வராக இரட்டை இலைச் சின்னத்திற்கு வாக்களியுங்கள்.

ஏழை - எளிய மக்களுக்காக உழைக்கும் உத்தமர் புரட்சித்தலைவர் சோதனைகள் வரும் போது பிரம்மாண்டமாக எழுந்து நிற்பது புரட்சித் தலைவர் வரலாறு.

புரட்சித்தலைவர் மனம்மகிழ இரட்டை இலை சின்னத்திற்கு வாக்களிக்க வேண்டும்.

புரட்சித்தலைவரது சாதனைகளை நாம் சொன்னாலே போதும். நமது கூட்டணி வெற்றி பெறும்.

தான் முதல்வராக ஆகலாம் என்று கருணாநிதி பகல் கனவு காண்கிறார். கருணாநிதியை மக்கள் ஏற்க மாட்டார்கள் மீண்டும் புரட்சித் தலைவர் தான் முதல்வர்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

Edited and Published by. K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road Madras - 29

# புயலெனப் புறப்பட்டு இருக்கும் புரட்சித்தலைவரின் படை பாரீர்!



பு. குழந்தைவேலு
கோபி. நாடாளுமன்றம்

அண்ணா நம்பி
பொள்ளாச்சி
(நாடாளுமன்றம்)

பெ. செல்வேந்திரன்
பெரியகுளம்
(நாடாளுமன்றம்)

சவுந்திரராசன்
சிவகாசி
(நாடாளுமன்றம்)

மகாலிங்கம்
நாகை
(நாடாளுமன்றம்)

ஜெகத்ரட்சகன்
செங்கற்பட்டு
(நாடாளுமன்றம்)

வைஜயந்திமாலா
தென்சென்னை
(நாடாளுமன்றம்)

மரகதம் சந்திரசேகர்
ஸ்ரீ பெரும்புதூர்
(நாடாளுமன்றம்)

தமிழ்நாட்டில்

## எம். ஜி. ஆரின் நல்லாட்சி தொடரவேண்டும்

### இந்திரா காங்கிரஸ் தலைவர் பழனியாண்டி பேச்சு

சென்னை, டிச. — தமிழக முதல்வர் பூரண நலம் பெற்று தமிழகம் திரும்ப வேண்டும். அவரது நல்லாட்சி தமிழகத்தில் தொடரவேண்டும் என்று தமிழ்நாடு இந்திரா காங்கிரஸ் தலைவர் பழனியாண்டி கூறினார்.

தமிழ்நாடு இந்திரா காங்கிரஸ் தலைவர்பழனியாண்டி வானொலியில் தேர்தல் பிரச்சார உரை நிகழ்த்தினார்.

பழனியாண்டி பேசியதாவது:-

தமிழ்நாட்டில் அனைத்திந்திய அண்ணாதி.மு. கழகம், கா.கா.தே.கா, மற்றும்தோழமைக்கட்சிகள் தங்கள் ஆதரவை காங்கிரசுக்கு கொடுக்கின்றன.

இந்திரா காந்தியைப் போலவே தமிழ்நாட்டில் முதல்வர் எம். ஜி. ஆர். ஏழை-எளிய மக்களின் நல்வாழ்விற்காக எண்ணற்ற திட்டங்களை செயல்படுத்தி வருகிறார்.

அவர் பூரண நலம் பெற்று தமிழகம் திரும்ப வேண்டும் என்று பிரார்த்தனை செய்கிறோம்.

அவரது லட்சியங்கள் முழுமை பெற, தமிழ்நாட்டில் தொடர்ந்து அவரது நல்லாட்சிக்கானவாய்ப்பு வேண்டும் என்று விரும்புகிறோம்.

ஆகவே தமிழக மக்கள் காங்கிரஸ் - அனைத்திந்திய அண்ணா தி. மு.கழக வேட்பாளர்கட்கு ஆதரவு தருவதன்மூலம் நிலையான ஆட்சியையும் நல்வாழ்விற்கான உத்திரவாதத்தையும் பெற முடியும்.

இவ்வாறு பழனியாண்டி பேசினார்.

ஏர்னஸ்ட்பால்
மத்திய சென்னை
(நாடாளுமன்றம்)

எல்ல. ராஜமாணிக்கம்
தாம்பரம்

முஸ்தபா
வாணியம்பாடி

கழக அணிக்கு

### கிறித்துவ முன்னேற்றக் கழகம் ஆதரவு

சென்னை. டிச. 6 கழகம்-இந்திராகாங்கிரஸ் கூட்டணிக்கு ஆதரவு அளிப்பது என கிறித்துவ முன்னேற்றக்கழகம்முடிவு செய்துள்ளது.

இந்த செயற் குழு கூட்டத்தில் இந்தமுடிவு எடுக்கப்பட்டதாக இந்த அமைப்பின் தலைவர் ஜோசப் பெர்னான்டோ தெரிவித்துள்ளார்.

புரட்சித்தலைவருக்கு ஓட்டு
பிரிவினை சக்திக்கு வேட்டு!

கருணாநிதிக்கு போடும் ஓட்டு
இந்திய ஒற்றுமைக்கு வேட்டு!

## யாருக்கு உங்கள் ஓட்டு?

நாட்டோரே! நல்லோரே!
ஒரு கணம் சிந்திப்பீர்!

## ஆதரிப்பீர் இரட்டை இலை- கைச் சின்னம்

## கழகக்கூட்டணி பிரமாண்டமான வெற்றிபெறும்

### அமைச்சர் திருநாவுக்கரசு பேச்சு

புதுக்கோட்டை டிச, 6- கழகம் - இந்திரா காங்கிரஸ் கூட்டணி இந்தத் தேர்தலில் பிரமாண்டமான வெற்றி பெறும் என்று அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

அறந்தாங்கிப் பகுதியில் பல்வேறு தேர்தல் பிரச்சாரக்கூட்டங்களில் அமைச்சர் திருநாவுக்கரசு கலந்துகொண்டு பேசினார்.

மணல்மேல்குடி ஒன்றியத்தில் ஊழியர்கள் கூட்டத்தில் அமைச்சர் திருநாவுக்கரசு கலந்து கொண்டார்.

### பிரதமர் ராஜீவ்

பிறகு வல்லவாரி, அயில்குடி ஆகிய பகுதிகளுக்குச் சென்று மக்களைச்சந்தித்துவாக்குகள் சேகரித்தார்.

பிறகு அறந்தாங்கியில் நடந்த தேர்தல் கூட்டத்தில் அவர் பேசியதாவது :-

கழகம் - இந்திரா காங்கிரஸ் கூட்டணி 1977ல் பெற்றதுபோல் பிரமாண்டமான வெற்றி பெறும்.

ராஜீவ்காந்தி பிரதமராகவும், புரட்சித்தலைவர் முதல்வராகவும் மீண்டும் வருவதற்கு இந்த முற்போக்குக்கூட்டணி பாடுபடும்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

ஏ.சி. சண்முகம்
வேலூர்
(நாடாளுமன்றம்)

ரகுபதி
காட்பாடி

முருகன்
செய்யாறு

கழக அணிக்கு

### கொடிக்கால் விவசாயிகள் சங்கம் ஆதரவு

சென்னை, டிச. 6- நடைபெற உள்ள தேர்தலில் கழகம்இந்திராகாங்கிரஸ் அணிக்கு ஆதரவு அளிப்பதென தமிழ்நாடு கொடிக்கால் விவசாயிகள் சங்கம் முடிவு செய்துள்ளது.

சங்கம் பொதுச்செயலாளர் சூரியநாராயணன் தலைமையில் நடந்த ஆட்சிமன்றக் குழுவில் தீர்மானம்இவ்வாறுநிறைவேற்றப்பட்டது.

வெற்றிலைக் கொடிக்கால்கள்விவசாயிஆதரவைத்திரட்ட சூரியநாராயணன் தலைமையில் 14 பேர் கொண்ட பிரச்சாரக் குழுவும் அமைக்கப் பட்டுள்ளது.

டி. மாரிமுத்து
குளத்தூர்

பொ. அன்பழகன்
இளையாங்குடி

எம். பிச்சை
அருப்புக்கோட்டை

சுந்தரராஜன்
விருதுநகர்

வி. பாலகிருஷ்ணன்
சிவகாசி

இரா. தாமரைக்கனி
ஸ்ரீவில்லிபுத்தூர்

ஆர். கே. பெருமாள்
விளாத்திகுளம்

சங்கரலிங்கம்
சங்கரன்கோயில்

# கிளம்பிற்றுகாண் தமிழ்ச் சிங்கக்கூட்டம்!

# கதை அளக்கிறார் குவளையூரார்

ஆயிரம்விளக்குத் தொகுதியில் நிற்க 500 ரூபாய் கட்டி மனு கொடுக்க யாருமே முன்வரவில்லை. அப்படி என்றால் யாரைக் கண்டோ பயப்படுகிறார்கள் என்று பொருள் அல்ல. (சிரிப்புவருகிறதா?) யார்மீதோ பாசம். (அஹ் அஹ்...ஹா...) என்று தான் பொருள்.

"என் பையில் இருந்த டிக்கெட்டைப் பேராசிரியரும், பொருளாளர் சாதிக்கும் வலுக்கட்டாயமாகப் பிடுங்கி அதில் ஸ்டாலின் பெயரை எழுதினார்கள்" - என்று உங்க "ரீல்" - எங்க "ரீல்" இல்லை - உலகமகா "ரீலை" விட்டிருக்கிறார் கருணாநிதியார்.

கதையளப்பதற்கு எல்லை வேண்டாமா?

அது சரி...!

பொதுச் செயலாளரும், பொருளாளரும் சொன்னதைக் கட்சித்தலைவர் என்றமுறையில் தட்டமுடியவில்லை என்பதை வாதத்திற்காக ஒப்புக் கொண்டாலும்-

தந்தை என்ற முறையில் மகனைத் தடுத்து இருக்கலாமே?

-வீ. அ.

# வெற்றிவாகை சூட உள்ள கழக வீரர்கள்


நாஞ்சில் வின்சென்ட்
பத்மநாபபுரம்


சண்முகய்யா பாண்டியன்
ஆலங்குளம்


கருப்புசாமி பாண்டியன்
பாளையங்கோட்டை


பி.எச்.பாண்டியன்
சேரன்மாதவி


ஜான்வின்சென்ட்
நாங்குநேரி


பி.என். ராமச்சந்திரன்
பட்டுக்கோட்டை


பெருமாள் பிள்ளை
கன்னியாகுமரி


குப்புசாமி
ஒட்டன்சத்திரம்

## புரட்சித்தலைவரின் அன்புத்தம்பிகளுக்கே எங்கள் வாக்கு

### அமைச்சர் கே. ஏ. கே.யிடம் தாய்மார்கள் உறுதி

சென்னை, டிச. ௬- அமைச்சர் கே. ஏ. கே. கடந்த 4-ந் தேதி காலைமுதல் பிற்பகல் 2 மணி வரை மக்களை வீடு வீடாகச் சென்று சந்தித்து வாக்கு கேட்டார்.

ஆயிரம்விளக்குதொகுதியில் கழகம், இந்திராகாங்கிரஸ் முற்போக்கு அணி வேட்பாளராகப்போட்டியிடும் அமைச்சர் கே.ஏ.கே. ஒவ்வொரு வீடாகச் சென்று வாக்காளர்களைச் சந்தித்து வருகிறார்.

4-ந்தேதிகாலை107வது வட்டத்திலுள்ள ராம நாயக்கன் தெரு, மேல் பாதிமுத்து தெரு, மாங்காடுசாமி தெரு ஆகிய இடங்களில் வீடு வீடாகச் சென்று வாக்காளர்களை சந்தித்து அமைச்சர் கே. ஏ. கே. ஆதரவு திரட்டினார்.

அமைச்சர் கே. ஏ. கே சென்ற இடமெல்லாம் தாய்மார்கள் ஆரத்தி எடுத்து வெற்றிதிலகமிட்டு புரட்சித்தலைவரின் அன்புத் தம்பிகளுக்கே தங்கள்வாக்குஎன்று கூறினர். அமைச்சருடன், அங்கமுத்து எம்.எல்.சி. புரட்சி மணி, நுங்கை மாறன், சலீம், ராமபத்ரன், நல்லப்பன், சரஸ்வதி உள்ளிட்ட பலர் சென்றனர்.

பிரதமர் ராஜீவ்காந்தி

### அரியானாவில் புயல்வேக சுற்றுப்பயணம்

சண்டிகர். டிச. ௬- பிரதமர் ராஜீவ் காந்தி அரியானா மாநிலத்தில் இம்மாதம் 11 ஆம் தேதி புயல்வேக தேர்தல் பிரசாரத்தில்ஈடுபடுகிறார் மொத்தம் 6 இடங்களில் பிரதமர் பேசுகிறார் என்று முதல்வர் பஜண்லால்நிருபர்களிடம் கூறினார்.

# ஊழல் பெருச்சாளி அந்துலேவும் முழுப்புரட்சி வீரரும்

உலகமகா ஊழல் மன்னன்-மராட்டிய கருணாநிதி அந்துலேவுக்கு, ஜனதாக் கட்சியின் தலைவர் சந்திரசேகர் ஆதரவு தெரிவித்திருக்கிறார்!

"லோக் நாயக்" ஜெ. பி. யின் அரசியல் வாரிசு - வடிகட்டிய "முழுப்புரட்சியின்" முன்னணி வீரர்இப்படி நடந்துகொண்டதில் நமக்கு வியப்பில்லை.

"இளந் துருக்கியர்" என்ற பெயரில் காங்கிரஸ் முகாமில் இந்தப் பெருச்சாளிகள் இருந்த போது-பிர்லாவை "திட்டோ திட்டு என்று திட்டுவார்கள்" டாட்டாவைப் பற்றி மூச்சுவிட மாட்டார்கள்! அது பரம ரகசியம்!

சந்திரசேகர் மாறிவிடவில்லை. அவர்எப்போதும் அப்படித்தான்!

-கா

கழக அரசின் தீவிர முயற்சியால்தான்

## ஆயிரக்கணக்கான தொழிலாளர் வாழ்வு மலர்ந்தது:

# பின்னி ஆலை மூலம் அரசியல்ஆதாயம்தேடும் கருணாநிதி கும்பல்

## வை. பெருமாள் காட்டமான தாக்கு

சென்னை, டிச. ௬- கழக அரசின் தீவிர முயற்சியால் தான் பின்னி ஆலை திறக்கப்பட்டது. ஆனால் பின்னி ஆலையை வைத்து அரசியல் ஆதாயம் தேட கருணாநிதி கட்சியினர் முயன்று வருவது கண்டிக்கத் தக்கது என, அண்ணா தொழிற் சங்க பேரவை பொதுச் செயலாளர் வை. பெருமாள் தெரிவித்துள்ளார்.

அண்ணா தொழிற் சங்கப் பேரவைப் பொதுச் செயலாளர் வை. பெருமாள் விடுத்துள்ள அறிக்கையொன்றில் தெரிவித்திருப்பதாவது :-

பின்னி ஆலையை திறப்பதற்கு முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவர் அரசு தொடர்ந்து நடவடிக்கை எடுத்து வந்ததையும், மறைந்த பாரதப் பிரதமர் அன்னை இந்திரா காந்தி கூட்டியிருந்த தேசிய வளர்ச்சிக் கவுன்சில் கூட்டத்திலேயே டாக்டர் புரட்சித் தலைவர் பின்னி ஆலையை திறக்க வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தியதையும் நாட்டு மக்கள் நன்கு அறிவார்கள்.

பின்னி ஆலையைத் திறக்க வேண்டுமென்று உள்ளபடியே முயற்சி எடுத்துக் கொண்டவர்கள் தொழிலாளர் நல அமைச்சர் எஸ். இராகவானந்தம் நாடாளுமன்றதுணை சபாநாயகராக இருந்த ஜி. லட்சுமணன், கழக தொழிலாளர் அணிச் செயலாளர் க. சுப்பு, தொழிற் சங்கத் தலைவர் எஸ். சி. சி.அந்தோணிப் பிள்ளை ஆகியவர்களைக் குறிப்பிட்டுச் சொல்லலாம்.

ஆனால் பிரச்சினை பற்றியேகவலைப்படாத. எந்தமுயற்சியும் எடுத்துக் கொள்ளாத, பின்னிஆலை தொடர்ந்து மூடி இருக்காதா, அதை வைத்து அரசியல் ஆதாயம் தேட முடியாதா என்று ஆசைப்பட்டுக் கொண்டிருந்த, கருணாநிதியின் கட்சியை சார்ந்த கலாநிதியின் முயற்சியா லே தான், பின்னி ஆலை திறக்



கப்பட்டது என்று செய்திவெளியிட்டிருப்பது வன்மையாகக் கண்டிக்கத் தக்கது. உண்மைக்குப் புறம்பான செய்திகள் வெளியிட்டு ஓட்டுக்கள் பெற்றுஅரசியல் ஆதாயம் பெறலாம் என்று கருணாநிதி கட்சியினர் காணும் கனவு பலிக்காது இவ்வாறுவை. பெருமாள் தெரிவித்துள்ளார்.

மொரார்ஜிக்கு

# கருணாநிதி கறுப்புக்கொடி காட்டுவாரா?

இலங்கைத் தமிழர் பிரச்சினையில் மாறுபட்ட கருத்தைத் தெரிவித்ததற்காக திராவிடர் கழகத்தைத் தூண்டிவிட்டு மொரார்ஜிதேசாய்க்குகறுப்புக் கொடி காட்டிய கருணாநிதியாரே!

உங்கள் கூட்டணிக்கு ஆதரவு தேட மொரார்ஜி தேசாய் வரும்15-ந் தேதிதமிழகத்திற்குவரப்போகிறாரே?

இலங்கைத்தமிழர் பிரச்சினையில் தேசாய் தன் கருத்தை இன்னும் மாற்றிக்கொள்ள வில்லை.

இப்போதும் கறுப்புக் கொடி காட்டலாமே !

-கா

# கழகக் கூட்டணி வேட்பாளர்களுக்கே எங்கள் ஆதரவு

## சலவைத் தொழிலாளர் சங்கம் அறிவிப்பு

விருத்தாசலம், டிச. ௬- கழகம் மற்றும் அதன் தோழமைக்கட்சிகளின் வேட்பாளர்களை ஆதரித்து வெற்றி பெறச் செய்வோம் என தமிழக அண்ணா சலவைத் தொழிலாளர் சங்கம் அறிவித்துள்ளது.

அண்ணா சலவைத் தொழிலாளர் சங்கப்பொதுச்செயலாளர் மா. முனியன், அறிக்கை ஒன்றில் தெரிவித்திருப்பதாவது:-

சமுதாயத்தில் நலிந்த பிரிவினரான, சலவைத் தொழிலாளர்கள், வாழ்வில் முன்னேற புரட்சித்தலைவர் அரசு ஏராளமான சலுகைகளை அளித்துள்ளது.

சலவைத் தொழிலாளர் குறைந்தபட்ச கூலி நிர்ணயக் குழு அமைக்கப்பட்டதும் குறிப்பிடத்தக்கது ஆகும்.

ஆகவே சலவைத் தொழிலாளர்கள் அனைவரும் கழக வேட்பாளர்களையும், மற்றும் கழகத் தோழமைக் கட்சி வேட்பாளர்களையும் வெற்றி பெற செய்யுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு மா. முனியன் தெரிவித்துள்ளார்.

புரட்சித்தலைவருக்கு முதல்வர் பதவி

தருவேன் என்று கூறும் கருணாநிதியே

# சிங்கத்திற்கு சிறுநரியா பட்டம் சூட்டுவது?

## அமைச்சர் ஆர். எம். வீ. சங்கநாதம்

**சென்னை, டிச. 7- புரட்சித்தலைவரிடம் முதலமைச்சர் பதவியை ஒப்படைப்பேன் என்று கருணாநிதி கூறியிருக்கிறார். சிங்கத்திற்கு சிறுநரியா பட்டம் சூட்டுவது புரட்சித்தலைவர் நலம் பெற்று விரைவில் முதல்வராகவே திரும்பி வரப்போகிறார். அதையும் கருணாநிதி பார்க்கத்தான் போகிறார் என்று அமைச்சர் ஆர். எம். வீ. எழுச்சி முழக்கமிட்டார்.**

மயிலாப்பூர் தொகுதி கழக வேட்பாளர் வளர்மதி, தென்சென்னை நாடாளுமன்ற வேட்பாளர் வைஜயந்திமாலா ஆகியோர் அறிமுகக் கூட்டம் மயிலை மாங்கொல்லையில் நடைபெற்றது. இந்தக் கூட்டத்திற்கு மயிலை ஜெகன் தலைமை வகித்தார். அமைச்சர் ஆர். எம். வீ., ஜேப்பியார் எம்.எல்.சி., டி. கே. கபாலி, வேட்பாளர்கள் வளர்மதி, வைஜயந்திமாலா மற்றும் பட்டுக்கோட்டை ரஹீம் உள்ளிட்ட பலர் பேசினார்கள்.

வேட்பாளர்களை அறிமுகம் செய்து வைத்து அமைச்சர் ஆர். எம். வீ. பேசுகையில் கூறியதாவது:

### எஃகு கோட்டை

தலைவன் இல்லாத சமயத்தில் இந்தப் படை (கழகச் சேனை) குழப்பமடையுமென எதிர்பார்த்தவர்கள் இன்று ஏமாந்து போய் இருக்கிறார்கள். கழகம் யாரும் அசைக்கமுடியாத எஃகுக் கோட்டையைப் போல் இருப்பதைக்கண்டு மனங்கலங்கி நிற்கிறார்கள் அன்பை கொட்டுவது போல் நடித்து கருணாநிதி கழக அணிவகுப்பை, கழக ஒற்றுமையை சீர்குலைக்க எண்ணினார். அது முடியாததால் இன்று ஒப்பாரி வைக்கத் தொடங்கியுள்ளார்.

புரட்சித்தலைவர் விரைவில் நலம் பெற வேண்டுமென்று மனித பண்பில்லாத கருணாநிதியை தவிர நாடே பிரார்த்திருக்கிறது. கருணாநிதியின் ஆசையெல்லாம் எப்படியாவது முதலமைச்சர் பதவியைக்கைப்பற்றிவிட வேண்டுமென்பதுதான் சில நாட்களுக்கு முன் கருணாநிதி இவர் முதலமைச்சரானாலும் புரட்சித்தலைவர் நலம் பெற்று திரும்பினால் அவரிடம் முதலமைச்சர் பதவியை ஒப்படைத்து விடுவாராம் என்ன பைத்தியக்காரத்தனம் பார்த்தீர்களா? சிங்கத்துக்கு சிறு நரியா பட்டம் சூட்டுவது? புரட்சித்தலைவர் நலம் பெற்று இந்த நாட்டின் முதல்வராக விரைவில் திரும்பி வரப்போகிறார். அதை கருணாநிதியும் பார்க்கத்தான்போகிறார்.

கழகம் இந்திரா காங்கிரஸ் கூட்டுகாலம் இணைத்த கூட்டுஒருமைப்பாட்டைக் காக்க இரு பெரும் தலைவர்கள் எடுத்தமுடிவு.

### தஞ்சையில் நடந்தது என்ன?

இந்தநேரத்தில்ஒன்றை கூற கடமைப் பட்டுள்ளேன். முன்பு தஞ்சை இடைத்தேர்தலில் நாடாளுமன்றத்திற்கு முதலில் இந்திராபோட்டியிடுவதாக இருந்தது. பின்பு அது கைவிடப்பட்டது. இதற்குக் காரணம் பல பேருக்குத்தெரியாது. தஞ்சையில் இந்திரா நிறுத்தப்பட்டால் அவரை எதிர்த்து எதிர்க்கட்சி வேட்பாளராக கருணாநிதியை நிறுத்த பரோடா வெடி குண்டு புகழ் பெர்னாண்டஸ் வற்புறுத்தினார் இந்திரா அங்கு நிறுத்தப்பட்டால் தஞ்சைத் தொகுதியையே கொலைக்களமாக்க திட்டமிட்டிருந்தனர்.

இதையறிந்து தான் புரட்சித்தலைவர்இந்திராவின் உயிருக்கு ஆபத்து விளையுமோ என்று கருதிதான் இந்திராவை ஆதரிக்க மறுத்தார். அன்று புரட்சித்தலைவர் இந்த முடிவை எடுக்காதிருந்தால் என்ன நேர்ந்திருக்கும் என்பதை நினைக்கவே அச்சமாக இருக்கிறது.

நாட்டுக்காக வாழ்ந்து நாட்டுக்காக தன்னை அர்ப்பணித்தவர் இந்திரா. அவர் கட்டிக்காத்தவலிவான இந்தியாவின்ஒருமைப்பாடுமேலும் சிறந்துவிளங்க மத்தியில் ராஜீவ்காந்தி பிரதமராகவும் மாநிலத்தில் புரட்சித்தலைவர் முதல்வராகவும்நீங்கள்ஆதரவுதர வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ பேசினார்.

### விழா சிறப்பு

மயிலை மாங்கொல்லையில் நடைபெற்ற இந்தக் கூட்டத்திற்கு நள்ளிரவு நேரத்திலும்பெருந்திரளாக பெண்கள் வந்திருந்தனர் பெண்கள் பெருந்திரளாக கூட்டத்திற்கு வந்திருந்தது வளர்மதி வைஜயந்திமாலாவின் வெற்றிக்கு கட்டியம் கூறுவதாக அமைந்தது.



புரட்சித்தலைவர் உடல்நிலை பற்றி

# கருணாநிதி கூறும் கதை எடுபடாது: அண்டே தாக்கு



**மதுரை, டிச. 7-'இந்தியா டுடே'பத்திரிகை முதல்வர் உடல் நிலை நன்றாக தேறி வருவதாக எழுதியுள்ளது. ஆனால் கருணாநிதி அந்த பத்திரிகையில் தவறாக எழுதப்பட்டுள்ளதாக கூறி மக்களை திசைதிருப்ப கதையளக்கிறார். அவரது பொய் எடுபடாது என்று அமைச்சர் அண்டே கூறினார்.**

மதுரை மேற்குதொகுதியில் இரண்டு தலைமைத் தேர்தல் அலுவலகத்தை அமைச்சர் அண்டே திறந்து வைத்தார். ஒன்று செல்லூர் 60அடி ரோட்டில் அமைந்துள்ளது. மற்றொன்று மேலப் பொன்னகரம் முக்கிய வீதியில் அமைந்துள்ளது.

தேர்தல் அலுவலகத் திறப்பு விழாவுக்கு மாநகராட்சி முன்னாள் உறுப்பினர் கருணைதாசன் தலைமை தாங்கினார். அதில் அமைச்சர் அண்டே பேசியதாவது:-

புரட்சித் தலைவர் மிகவும் நன்றாக இருக்கின்றார். நடக்கின்றார். ஒருசில வார்த்தைகளைப் பேசுகின்றார். புரட்சித் தலைவர் போனமாதம் 5-ந் தேதி அமெரிக்காவுக்கு சிகிச்சைக்காக அழைத்துச் செல்லப்பட்டார். அதே 5-ந் தேதி இன்று தேர்தல் அலுவலகம் திறப்பு விழா நடைபெறுகிறது. புரட்சித் தலைவரின் தொண்டர் எஸ். பாண்டியன் வெல்வது உறுதி.

புரட்சித் தலைவரின் உடல் நிலையை வைத்து நாங்கள் அரசியல் நடத்தவில்லை. என்றென்றும் உண்மையைத்தான் நாங்கள் கூறி வருகின்றோம். அப்பல்லோ மருத்துவமனையில் சேர்ந்த நாள் முதல் இன்றுவரை அவரின் உண்மையான உடல் நிலையைத்தான் நாங்கள் கூறி வருகின்றோம்.

### இருகை தூக்கி வணக்கம்

டாக்டர் குமரேசன் கருணாநிதிக்கு ஏதோதகவல் சொன்னதாக கருணாநிதி கூறுகின்றார். அதேகுமரேசனை எனக்கு தெரியும். அவர் தான் எனக்கு தகவல்கூறியுள்ளார். புரட்சித் தலைவர் இரு கைகளாலும் வணக்கம் தெரிவிக்கின்றார் என்று

இன்று கூட தி. மு. க. பத்திரிகை ஒன்றில் கருணாநிதி கூறியுள்ளார். அதில் 'இந்தியா டுடே' என்ற பத்திரிகையில் முதல்வர் இனி குணம் அடையமாட்டார் என்று எழுதி உள்ளதாக கருணாநிதி கூறுகிறார். அதே 'இந்தியா டுடே' பத்திரிகையை நான் வாங்கி பார்த்தேன். அதில் உள்ளதாவது:

புரட்சித்தலைவர் நாளுக்குநாள் முன்னேறி வருகிறார். அவர் இப்பொழுது நடக்கிறார். மற்றவர்கள் சொல்வதையும் புரிந்து கொள்கின்றார். பேசுகின்றார் என்று எழுதி உள்ளது. எனவே கருணாநிதி என்ன பொய் சொன்னாலும் மக்கள் நம்ப தயாராக இல்லை.

### நல்ல தலைமை

இந்தியப் பேரரசைக் காக்க நாட்டுக்கு நல்ல தலைமை தேவை அது ராஜீவால் தான் முடியும். ராஜீவ் காந்தியை பிரதமராக்க கழக முற்போக்குக் கூட்டணிமுடிவெடுத்துள்ளது. எனவே தமிழக முதல்வராக புரட்சித்தலைவர் திரும்பி வரவும், இந்திய பிரதமராக ராஜீவ் காந்தி வரவும் நீங்கள் ஏ. ஜி. சுப்புராமனுக்கு கை சின்னத்திலும், எஸ். பாண்டியனுக்கு இரட்டை இலை சின்னத்திலும்வாக்களிக்கவேண்டுகின்றேன்.

இவ்வாறு அமைச்சர் அண்டே பேசினார்.

முரட்டன்பத்திரி, ராமன் நகர், ஆரப்பாளையம் படித்துறை, கிராஸ்ரோடு செல்லூர், எஸ். எஸ். காலனி, பரமேஸ்வரி தியேட்டர் போன்ற இடங்களில் கழகக்கொடிகளை ஏற்றி வைத்தார்.

இந்தநிகழ்ச்சிகளில்வேட்பாளரும், நகர மாவட்ட செயலாளருமான எஸ். பாண்டியன், முன்னாள் மேயர் பட்டுராசன், நகர காங்கிரஸ் தலைவர் எம். கே. ராமகிருஷ்ணன், எச். எம். எஸ். நாராயனன், கா.கா.தேகா. வை 'சார்ந்த முத்துசாமி கழகத்தை சேர்ந்த வை. ராசேந்திரன், சந்தான கிருஷ்ணன், பிரமிளாகாந்தி, பேச்சாளர்கள்மானகிரி பாண்டியன், மதுரைசங்கர்வக்கீல் தியாகராசன், சேகர் மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

### திருவொற்றியூர் வேட்பாளர் அறிமுக கூட்டம்

சென்னை டிச. 7. திருவொற்றியூர் சட்டமன்றத்துக்கு கழகமுற்போக்கு அணி வேட்பாளராக போட்டியிடும் ஜெயபாரதி அறிமுகக் கூட்டம்இன்று (7ந்தேதி) மாலை 7 மணிக்கு மூலக்கடையில் நடைபெறுகிறது.

ஜம்புலிவடிவேலு தலைமையில் நடைபெறும் இந்தக் கூட்டத்தில் ஜேப்பியார் எம்.எல்.சி., மணிவர்மா, மோகன், தர்மலிங்கம். எல்லப்பன் சம்பந்தம், கேசவன், பூமிநாதன் உள்ளிட்ட பலர் பங்கேற்றுப் பேசுகின்றனர்.

## அமைச்சர் குழந்தைவேலு புதுமைப் பிரச்சாரம்



கோவை, டிச. 7- அமைச்சர் குழந்தைவேலு, தனது தொகுதியில் பஸ்சில் பயணம் செய்துபொது மக்களிடம் ஓட்டு கேட்டார்.

கோபிச்செட்டி பாளையம் நாடாளுமன்றத் தொகுதியில் போட்டியிடும் அமைச்சர் குழந்தைவேலுவும், சத்தியமங்கலம் தொகுதியில்போட்டியிடும் இ.காங்கிரஸ் வேட்பாளர் இளங்கோவனும் புதுமையான முறையில் தேர்தல் பிரச்சாரம் செய்து வருகின்றனர்.

அவர்கள்தங்கள்தொகுதிகள் உள்பட தாளவாடி, தாலமலை, பகுதிகளில் நேரில் சென்று பொது மக்களிடம் ஓட்டு சேகரித்தனர்.

பின்னர் அங்கிருந்து திம்பம் பஸ் நிலையத்திற்கு வந்து சேர்ந்தனர். அப்போது கொங்கல்லி கிராமத்துக்குச் செல்லும் பஸ் ஒன்று அங்கு வந்து நின்றது.

அந்த பஸ்சில் பயணிகள் கூட்டம் நிரம்பி வழிந்தது.

அமைச்சர் குழந்தைவேலுவும், இளங்கோவனும் அந்த பஸ்சில் ஏறி குறைந்த தூரத்திற்கு டிக்கெட் வாங்கினார்கள். பஸ்கிளம்பியதும் அவர்கள் பயணிகளிடம் தங்களுக்கு ஆதரவாக ஓட்டு போடும்படி கேட்டனர்.

தேர்தலில்கழகம்மற்றும் கூட்டணிக்கு வாக்கு அளிக்குமாறு அவர்கள் கேட்டுக் கொண்டனர்.

பின்னர் தாங்கள் டிக்கெட் வாங்கிய ஊர் வந்ததும், இறங்கி வேறு பகுதிகளுக்குச் சென்று வாக்கு கேட்டனர்.

# புயலென பணியாற்றும் செயல்மறவர் கூட்டம் புறப்பட்டது பாரீர்

## அமைச்சர் காளிமுத்து முழக்கம்

**மதுரை, டிச. 7- நடைபெற இருக்கும் தேர்தலில் கருணாநிதி அணியை முறியடித்துக் காட்டுவோம் என அமைச்சர் காளிமுத்து தொண்டர்களிடையே வீரமுழக்கமிட்டார்.**

அமைச்சர் காளிமுத்து பேசுகையில் கூறியதாவது:-

புயலும் மழையும்இருந்தாலும் புயலைவிட வேகமாக செயலாற்றும்செயல் வீரர்கள் கூட்டம் இங்கே நடைபெற்றுக் கொண்டு இருக்கிறது. தேர்தல் எப்படிப்பட்ட சூழ்நிலையில் நடைபெற்றுக் கொண்டு இருக்கிறது என்பதைஅறிவீர்கள்.

நாளை எதிரணி பத்திரிகைகளில் கேலியாக எழுதக்கூடும் காளிமுத்துவும் ஏ. ஜி.சுப்பராமனும் ஒன்றாக அமர்ந்து இருக்கின்றார்கள் காளிமுத்துவும் தளபதிசண்முகமும்ஒன்றாக அமர்ந்திருக்கிறார்கள். கடந்த காலத்தில் காங்கிரசை எதிர்த்த காளிமுத்து காங்கிரஸ்காரர்களுடன் ஒன்றாக அமர்ந்திருக்கிறார் என்று நம்மை குழப்பக்கூடும். கருணாநிதி எழுதவும், பேசவும் கூடும்.

காங்கிரசை எதிர்த்த காளிமுத்து எப்படி காங்கிரசுடன் சேரக் கூடும்.

காக்கா - நரி கதை காக்கையைப்பாட்டுபாடச் சொல்லி காக்கையிடமிருந்து வடையை, நரி தந்திரமாகப் பெற்ற கதையைப்போல கருணாநிதி இத்தேர்தலில் நடக்க முயற்சிக்கிறார்.

கருணாநிதி அணியை முறியடித்துக்காட்டுவேன் அகம்பாவம்-ஆணவம் இவற்றோடு சொல்லவில்லை தன்னம்பிக்கையோடு சொல்லுகின்றேன்,

### புரட்சித்தலைவர் காட்டிய வழி

ஒருகூட்டணியைஎப்படி வழி நடத்திச் செல்ல வேண்டுமென்று புரட்சித் தலைவர்சொல்லியுள்ளார். 1977 பாராளுமன்ற தேர்தலில் இந்திரா காங்கிரசிற்கும் கழகத்திற்கும் உறவு ஏற்பட்ட நேரத்தில் சொன்னார். ''கழகத் தோழர்கள் தோற்றாலும் பரவாயில்லை காங்கிரஸ் தோழர்களைவெற்றிபெற செய்யவேண்டும்'' என்றார்.

அப்பல்லோ மருத்துவமனைக்கு வந்து இந்திரா காந்திபுரட்சித்தலைவரை பார்த்தார், அமெரிக்கா, ஜப்பான் மருத்துவ நிபுணர்களும் குறிப்பிட்ட தினத்துக்கு முதல் நாளே வந்து தலைவரின் உயிர் காக்கச் செய்தார் இந்திரா, புரட்சித்தலைவர் உயிர் காக்கத் துடித்த இந்திரா இப்பொழுது இல்லையே! இந்திரா மறைவுக்குப் பிறகும், புரட்சித்தலைவரை அமெரிக்காவுக்கு அழைத்துச்செல்லஅன்னியச்செலாவணிக்கு பிரதமர் ராஜீவ் கையெழுத்திட்டார்.

தாயார்சடலம்கிடக்கும் நேரத்திலும் கையெழுத்திட்டார். புரட்சித் தலைவர் அமெரிக்காபுறப்படும் முன், நாவலருடன் கேட்டறிந்தார்.

தலைவரை அனுப்பி வைக்க, மூப்பனார், நரசிம்மராவ் ஆகியோரை அனுப்பிவைத்தார்.

### பாசம் பரிவு

பாசத்தோடு, பரிவோடு அவர்களின் உதவியை நன்றி உணர்ச்சியோடு எண்ணிப் பார்க்கிறோம்.

தொகுதி பங்கீடுபற்றிய பேச்சு வார்த்தையின் போது, அண்ணன் சிவாஜி வந்தார். ''50 ஆண்டுகள் நீங்கள்திரையுலகில் இருப்பதற்காக விழா நடத்திக் காட்டுவேன்'' என்று சொன்ன அண்ணன் புரட்சித்தலைவர், அமெரிக்காவில் இருக்கிறாரே என்று கழகத் தலைமை அலுவலகத்தில் சொல்லி கண்ணீர் விட்டார்.

### நம்பிக்கை நட்சத்திரம்

80-ம் ஆண்டு தேர்தலில் இந்திரா காந்தி காலையில் சென்னையில் துவங்கி, ஒரே நாளில் தமிழகம்முழுவதும்சென்று பிரச்சாரம் செய்தார். அந்த இந்திரா காந்தி இப்போது இல்லை தமிழர்களின் நம்பிக்கை நட்சத்திரங்களான இந்திரா, புரட்சித் தலைவர் ஆகியோர் இப்போது இங்கு இல்லை.

தொண்டர்களை நம்பித்தான் கழகம், இந்திரா காங்கிரஸ் கூட்டணி தேர்தலில் நிற்கிறது. தேர்தல் என்பது சுவரொட்டி ஒட்டுவது, பேசுவது மட்டுமல்ல, வாக்காளர்களை அழைத்து வந்து வாக்குகளை போடவைக்கவேண்டியதே நல்ல பணி ஆகும்.

திருப்பரங்குன்றம் தொகுதியில் போட்டியிட்ட காளிமுத்துமதுரை கிழக்கு தொகுதிக்கு ஏன் வருகின்றார் என்று கேட்கிறார்கள் கிழக்குதொகுதி நெசவாளர்கள்தொழிலாளர்கள் நிறைந்த பகுதி. திருப்பரங்குன்றம் தொகுதியில் பல கிராமங்கள் அடங்கி உள்ளன. பல கிராமங்களுக்கும் நேரில் சென்று ஓட்டு கேட்க வேண்டும். ஆனால் கிழக்குத் தொகுதியில் வாக்கு சேகரிப்பது மட்டுமல்ல, கிழக்கு தொகுதியில் பணியாற்றி, மீதி நேரத்தில் தமிழகம் முழுவதும் பணியாற்றவேண்டும்என்பதற்காக கிழக்கு தொகுதியில் போட்டியிடுகிறேன்,



### அடுத்த பிரதமர் ராஜீவ்-முதல்வர் புரட்சித்தலைவர்

அடுத்தபிரதமர் ராஜீவ்-அடுத்த முதல்வர்புரட்சித் தலைவர். இதுதான் இந்திய துணைக் கண்டத்துக்கு நல்லது.

புரட்சித் தலைவரை எதிர்த்து வேட்பாளரை நிறுத்தமாட்டேன் என்ற கருணாநிதி வல்லரசு என்பவரை உதய சூரியன் சின்னத்தில் நிற்கவைத்து புரட்சித் தலைவரை எதிர்த்து மறைமுகமாக செயல் பட்டு வருகின்றார்.

ஒவ்வொரு தேர்தலிலும் புரட்சித் தலைவருக்கு கிடைத்த வெற்றி கருணாநிதி போட்ட பிச்சை அல்ல. கருணாநிதியை முறியடித்து பெற்ற வெற்றி.

நம் தலைவர் அமெரிக்காவில் நலம் பெற்றுவருகின்றார் நம் நெஞ்சம் திடுக்கிடும் செய்திகளை விஷமிகள் பரப்பி வருகிறார்கள் என் அன்னை மீது ஆணையிட்டு சொல்கின்றேன். புரட்சித் தலைவர் நலம் பெற்று வருவார். தமிழக முதல்வராக, தங்கத் தலைவராக வருவார்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து பேசினார்.

### தளபதி சண்முகம்

இந்தக் கூட்டத்தில் சிவாஜி மன்றத் தலைவர் தளபதி சண்முகம் பேசுகையில் கழகம், இந்திரா காங்கிரஸ்கூட்டணி புனிதமான ஒன்று. இதைப் பிரிக்க நினைப்பவர்கள் ஏமாந்து போவார்கள்என்று குறிப்பிட்டார்.

# நடைப்பிணமே கேள்

**"இந்திய ஜனநாயகம் எலும்புக் கூடாக இருக்கிறது. தெளிவாகச் சொன்னால் உடல்நலம் இல்லாத மந்திரி போல இருக்கிறது" என்று அன்பழகன் என்ற சாக்குருவி ஒலமிட்டிருக்கிறது.**

**பிரதமரைப் பறிகொடுத்த பதினைந்துநாட்களில்தேர்தலை சந்திக்கிற ஆண்மையுடனும், கம்பீரத்துடனும் நிமிர்ந்து நிற்கிறது இந்திய ஜனநாயகம்.**

**உம்மைப்போன்றசொந்த புத்தியும், சொரணையும் இல்லாத நடைப்பிணங்களைக்கூட சகித்துக் கொள்கிற அளவிற்கு இந்திய ஜனநாயக அமைப்பு ஆழமாகவும் இருக்கிறது.**

**போதும்... உமது புலம்பல்**

- கா

### பீட்டர்ஸ் காலனி மகளிர் மன்றம்

சென்னை டிச 7- சென்னை ராயப்பேட்டை பீட்டர்ஸ் காலனியில் மகளிர் மன்றம் துவங்கப்பட்டுள்ளது. ராஜேஸ்வரி நமச்சிவாயம் குத்து விளக்கு ஏற்றிவைத்து மன்றத்தைத் துவக்கி வைத்தார்.

மகளிர்மன்றத்தலைவராக சகுந்தலா சுப்பிரமணியமும், துணைத்தலைவராக சந்திராபார்த்தசாரதியும் செயலாளராக மங்களம் முருகேசனும், துணைச்செயலாளர்களாக செல்வி பாண்டியனும், நர்மதா சக்கரபாணியும், பொதுச் செயலாளராக சரோஜா ரங்கராமும் ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தலைமைக்கழக அறிக்கை எண் : 170-84

## வடஆற்காடு-சேலம்-தஞ்சை திருநெல்வேலி - குமரிமாவட்டக் கழகத் தோழர்களுக்கு...

கழக விதிமுறைகளுக்கு மாறாக நடந்து கழகத்தின் நற்பெயருக்குக் களங்கம்விளைவிக்கும் வகையில் கழக வேட்பாளர்களுக்கு எதிராக செயல்படும் காரணத்தினால்,

வடஆற்காடு மாவட்டம் வாணியம்பாடி நகரத்தைச் சேர்ந்த,

அ. கொ. பன்னீர்செல்வம்

(வாணியம்பாடி நகர அவைத்தலைவர்)

சேலம் மாவட்டம் ராசிபுரத்தைச் சேர்ந்த

எம். பி. துரைசாமி

தஞ்சை மாவட்டம் பேராவூரணியைச் சேர்ந்த

குழ. செல்லையா

நெல்லை மாவட்டம் விளாத்திகுளத்தைச் சேர்ந்த

தேவேந்திரன்

கோவில்பட்டியைச் சேர்ந்த

சீனிராஜ்

இராதாபுரத்தைச் சேர்ந்த

தேவ இரக்கம்

(ஒன்றியச் செயலாளர்)

குமரிமாவட்டம் திருவெட்டாற்றைச் சேர்ந்த

பி. சி. என். திலக்குமார்

ஆகியோர் இன்று முதல் கழகத்தின் உறுப்பினர் பொறுப்பு உட்பட அனைத்துப் பொறுப்புக்களிலிருந்தும் நீக்கப்படுகிறார்கள்.

கழக சார்பு மன்றத் தோழர்கள் யாரும் இவர்களுடன் எவ்விதத் தொடர்பும் வைத்துக்கொள்ள வேண்டாம் என்று கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

ப. உ. சண்முகம்
பொதுச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

சென்னை-14
6-12-84

## சென்னை மாவட்டம் மயிலைத் தொகுதி கழகத் தோழர்களுக்கு...

சென்னை மாவட்டம் மயிலைத் தொகுதி சட்டமன்றத் தேர்தல் பணி பொறுப்பாளராக தலைமைக் கழகத்தின் சார்பாக

வழக்கறிஞர் திரு. கற்பகவிநாயகம் அவர்கள் நியமிக்கப்பட்டுள்ளார்.

மயிலைத் தொகுதிக்குட்பட்ட அந்தந்த வட்டச் செயலாளர்கள் பொறுப்பில் அந்தந்த வட்டத்திற்குட்பட்ட அனைத்து அணிகளையும் சேர்ந்த தேர்தல் பணிக்குழுக்கள் பணியாற்றும்.

கழகத் தோழர்கள் மற்றும் சார்பு மன்றத் தோழர்கள் அனைவரும் அவர்களோடு தொடர்பு கொண்டு இணைந்து பணியாற்றிட கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

- தலைமைக் கழகம்
அனைத்திந்திய அண்ணா
தி. மு. கழகம்

சென்னை-14
7-12-84

## ஏ. பி. சனார்த்தனம், (முன்னாள் எம். பி.) தேர்தல் சுற்றுப் பயணம்

டிசம்பர் 11. நெல்லை
12, 13, மதுரை
14 சின்னாளப்பட்டி
15 மணப்பாறை
16 தஞ்சை
17 பண்ணுருட்டி
18 மேல் மலையனூர்
19 செங்கல்பட்டு
20 காஞ்சி
21, 22 சென்னை.

தலைமைக் கழகம்



பிறமாவட்டங்களைப்போல் வடஆற்காடு மாவட்டமும்

# புரட்சிதலைவரின் கோட்டை என்பது உறுதி ஆனது

## கழக அணிக்கு வெற்றிக்கனி வழங்க துடித்து நிற்கும் எழுச்சி!

வேலூர், டிச. 7- வடஆற்காடு மாவட்டத்தில் எங்கு சென்றாலும் கழகமுற்போக்கு அணிக்கே தங்கள் வாக்கு என மக்கள் உறுதியிட்டுக் கூறுகின்றனர். இந்தத் தேர்தலில் வடஆற்காடு மாவட்டத்தில் கழக முற்போக்கு அணியே பெரு வெற்றி பெறும் என்பது உறுதியாகிவிட்டது.

வடஆற்காடுமாவட்டம் குடியாத்தம் காட்பாடி பேரணாம் பட்டு ஆகிய தொகுதிகளில் பல்வேறு இடங்களில் கழகக் கொடியை ஏற்றுவித்தும், தேர்தல் அலுவலகங்களைத் திறந்துவைத்தும் பிரமாண்டமாக நடைபெற்ற பொதுக் கூட்டங்களிலும்சென்னை மாவட்டக் கழகச் செயலாளர் ஜேப்பியார் எம்.எல்.சி, பேசினார்.

### உற்சாக வரவேற்பு

புரட்சித் தலைவரின் அன்புத்தம்பி ஜேப்பியாருக்கு சென்றஇடமெல்லாம் மக்கள்உற்சாக வரவேற்பு தந்து, புரட்சித் தலைவர் வாழ்க, எங்கள் வாக்கு நாட்டின் ஒருமைப்பாட்டைக் காக்கும் ராஜீவ் காந்திக்கும், புரட்சித் தலைவருக்கு மே என்று உற்சாகமுழக்கமிட்டனர்.

பிச்சனூரில் ஜேப்பியார் கழக முற்போக்கு அணியின் தேர்தல் பணிமனையைத் திறந்து வைத்தார். இந்நிகழ்ச்சிக்கு விநாயகம், தலைமைவகிக்க, வெங்கடேசன், சுப்பு, ருத்திரன், ஜெகநாதன், உமாபதி, வி. ராமச்சந்திரன் முன்னிலை வகித்தனர்.

இந்தநிகழ்ச்சியில் குடியாத்தம் சட்டமன்ற வேட்பாளர் ஆர். கோவிந்தசாமியும், வேலூர் நாடாளுமன்ற வேட்பாளர்ஏ.சி.சண்முகமும்பங்கேற்றுப்பேசினர். நகர செயலாளர் மெய்ஞானம் மற்றும் உதயம் மணியன் உள்ளிட்டபலர் பங்கேற்று பேசினர்.

தொடர்ந்து கே.வி. குப்பத்தில் காட்பாடி சட்டமன்ற உறுப்பினர் ரகுபதியை அறிமுகம் செய்து ஜேப்பியார் எம். எல். சி. பேசினார். குடியாத்தம் சட்டமன்ற தொகுதியில் அடங்கிய வளத்தூரில் ஜேப்பியாருக்கு உற்சாக வரவேற்பு அளிக்கப்பட்டது. மேளதாளம் முழங்க,'புரட்சித் தலைவர்வாழ்க''இந்திராவின் புகழ் ஓங்குக என்ற கோஷத்துடன் கழக முற்போக்கு அணியினர் வரவேற்றனர்.

எம். ஜி. உதயம் தலைமையிலும், வளத்தூர்சேட்முன்னிலையிலும் நடைபெற்ற இந்தக் கூட்டத்தில் ஜேப்பியார்,ஏ. சி சண்முகம், ஆர்.கோவிந்தசாமி, மெய்ஞானம். மணியன், மாயகேசவன் வேலாயுதம், சங்கர் உள்ளிட்ட பலர் பங்கேற்று பேசினர். உன்னி குமார் நன்றி கூறினார்.

### முஸ்லிம் பெருமக்கள் வரவேற்பு

பேரணாம்பட்டு சட்டமன்றத் தொகுதியில் கழக அணியின் சார்பாக போட்டியிடும் தமிழரசனுக்கு ஆதரவு திரட்டி ஜேப்பியார் பிரச்சாரம்செய்தார். முஸ்லிம் பெருமக்கள் நிரம்பிய இந்தப்பகுதியில் ஜேப்பியாருக்கு முஸ்லிம் பெருமக்கள் உற்சாக வரவேற்பு தந்து அவரது பேச்சை உன்னிப்பாக கேட்டனர். இந்தக் கூட்டத்தில் ஜேப்பியார் பேசுகையில்முஸ்லிம் பெருமக்களுக்கு புரட்சித் தலைவர் அரசுசெய்துள்ள பல்வேறு சாதனைகளை எடுத்துக்கூறியும்,முஸ்லிம் பெருமக்களை ஏமாற்றுபவர்களை அடையாளம் காட்டியும் பேசினார்.

### பனியில் கூடிய மக்கள் வெள்ளம்

தொடர்ந்து நள்ளிரவில் குடியாத்தத்தில் நடைபெற்ற பிருமாண்டமான கழக முற்போக்கு அணி தேர்தல் பிரச்சாரக் கூட்டத்தில் பேசினார்.

நள்ளிரவு வேளையில் கொட்டும் பனியையும் பொருட்படுத்தாது மக்கள் பெருந்திரளாகக் கூடியிருந்து ஜேப்பியாரின் பேச்சைக் கேட்டனர்.

இந்தக் கூட்டங்களில் ஜேப்பியார் எம். எல் சி. பேசுகையில், புரட்சித் தலைவரின் உடல் நலம் குறித்து பொய்த் தகவல் கூறி,மக்களைத் திசை திரும்பமுனையும் கருணாநிதிக்கு தக்கபாடம் புகட்டுமாறு மக்களைக் கேட்டுக் கொண்டார்.

பிரிவினைவாதம் பேசும் கருணாநிதிக்கு தக்க பாடம் புகட்டுவதோடு நாட்டை பிளவுபடுத்த முயலும் சக்திகளை இந்த தேர்தலில் புறமுதுகிட்டோட செய்யுங்கள் என்றும் மக்களைகேட்டுக் கொண்டார்,

வடஆற்காடுமாவட்டம் என்றும் புரட்சித்தலைவரின் கோட்டையே என்பதைப் பறைசாற்றுவதாக இருந்தது. மேற்கண்ட நிகழ்ச்சிகள்.வடஆற்காடு மாவட்டத்தில் கழக முற்போக்குஅணி வேட்பாளர்கள் அனைவரும் பெரு வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெறுவது உறுதியாகி விட்டது.

## சி. ஆர். பட்டாபிராமன் மனைவி மறைவு

சென்னை: டிச. 7. முன்னாள் மத்திய அமைச்சர் சி. ஆர். பட்டாபிராமனின் துணைவியார் சரஸ்வதிஅம்மாள் காலமானார். பட்டாபிராமன்-சரஸ்வதிஅம்மாள் தம்பதியருக்கு மூன்று மகள்கள் இருக்கிறார்கள்.

## போபால் விஷவாயு: இறந்தவர்கள் எண்ணிக்கை 2 ஆயிரத்தை தாண்டியது

போபால். டிச. 7- போபால் நகரில் விஷவாயு தாக்குதலில் இறந்தவர்கள் எண்ணிக்கை 2000பேருக்கும்அதிகமானது. விஞ்ஞானிகளும்,புலனாய்வுதுறையினரும் இச்சம்பவம் பற்றி தொடர்ந்து விசாரிக்கின்றனர்.

## ராதாகிருஷ்ணன் நகர் தொகுதி தலைமைத் தேர்தல் அலுவலகம் திறப்பு

சென்னை, டிச. 7- சென்னை ராதாகிருஷ்ணன் நகர் தொகுதி சட்டமன்ற தலைமைத்தேர்தல் அலுவலகம்நேற்றுமாலை 6 மணிக்கு பி.எச்.ரோடில் பெரிய மார்க்கெட் அருகே வே. மோகனசுந்தரம் தலைமையில் நடைபெற்றது. மேலவைக் கொறடா ஜேப்பியார் இறந்து வைத்தார்.

தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் எம். பழனியாண்டி, திண்டிவனம் ராமமூர்த்தி எம். பி. வி.ராஜசேகரன், மதுசூதனன் எம். எல். சி, மு. வேதாசலம் மற்றும் பலர் பங்கேற்றார்கள்.

## பூலான்தேவிக்குக் கூட கூட்டம் வரும்!

"250 மைல் காரில் பயணம் செய்தும், 20க்கும் மேற்பட்ட நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வேன். என்மீது உள்ள இரக்கத்தினால் நீங்கள் உறக்கம் இல்லாமல்காத்துக் கொண்டேயிருக்கிறீர்கள்" என்று கடலூரில் பேய் கரடி விட்டு இருக்கிறார் கருணாநிதி.

பாம்புப் பிடாரனுக்கும், பரதேசிக்கும் கூட கூட்டம் வருகிறது.

சம்பல் பள்ளத்தாக்கு கொள்ளைக்காரி பூலான்தேவி வந்தால் இன்னும் அதிகமாகவே கூட்டம் வரும்!

அதனால் நாட்டுக்கு என்ன லாபம்?

உம்மைத்தேடிவருவதுகொள்கைப் பிடிப்புள்ள கூட்டமல்ல. கூடிக் கலைகிற கும்பல்.

இதை டிசம்பர் 24-ஆம் தேதி புரிந்து கொள்ள மனதைத் திட்டப்படுத்திக் கொள்ளும்!

-கா

வடசென்னை, எழும்பூர், பெரம்பூர் தொகுதிகளில்

## இப்போது தேர்தல் இல்லை

சென்னை, டிச. 7- சென்னையில்சுயேச்சை வேட்பாளர் சேமன் என்பவர் வடசென்னை நாடாளுமன்றத் தொகுதியிலும், பெரம்பூர், எழும்பூர் சட்டசபைத்தொகுதிகளிலும் போட்டியிட மனுதாக்கல் செய்திருந்தார். இவர் கொல்லப்பட்டதால் இத்தொகுதிகளில் தேர்தல்கள் ரத்து செய்யப்பட்டன. இத்தொகுதிகளில்ஜனவரி6-ந் தேதிதேர்தல்நடத்தலாம் என்று தேர்தல் கமிஷனுக்கு தமிழ்நாடு தலைமைத் தேர்தல் அதிகாரி சிபாரிசு செய்து இருந்தார்.அதைதேர்தல் கமிஷன் ஏற்றுக் கொள்ளவில்லை. எனவே இத்தொகுதிகளில் தேர்தல் தேதி பின்னர் அறிவிக்கப்படும்.

## மன்னிப்பா? உமக்கா?

"நான் முதலமைச்சராக இருந்த போது தவறு நடந்து இருந்தால் அதற்காக மன்னிப்புக்கேட்கிறேன்" என்று வாய்ஜாலம் செய்து மக்களை மயக்கக் கருணாநிதியார் முயற்சிக்கிறார்.

தெரியாமல் செய்த பிழைக்கு மன்னிப்புஉண்டு.மன்னிப்பவனே மனிதன்.

நீங்கள் செய்தது - "தப்பு" - அல்ல-"தவறு" அல்ல-"குற்றம்"- பெருங்குற்றம்!

எத்தனை பத்தினிகள் உமது ஆட்சியில் கண்ணீர் வடித்தனர். பத்தினிகள் சாபம் பலிக்கும் என்பதை அனுபவம் உணர்த்திய பின்னும் நீர் திருந்தவில்லை.

அப்படியே - மன்னிப்ப தானாலும்-

அப்ருவருக்கு- "மன்னிப்பு" உண்டே தவிர "மரியாதை" இல்லையே!

என்ன செய்யப்போகிறீர்?

-கா

கழகக் கூட்டணிக்கு ஆதரவாக

## டாக்சி-ஆட்டோ டிரைவர்கள் பிரச்சாரம்

சென்னை டிச. 7. நடைபெறவுள்ள தேர்தல் கழகம்-இந்திராகாங்கிரஸ் கூட்டணிக்கு ஆதரவு தெரிவித்து தமிழ்நாடு டாக்சி இயக்குபவர்கள் நல்வாழ்வுசங்கம் முடிவு எடுத்துள்ளது.

வாகனஓட்டுநர்கள்ஒன்று சேர்ந்து பிரசாரம் செய்வதுஎன முடிவு எடுத்துள்ளனர்.

கழக அணி வேட்பாளர்களை ஆதரிப்பீர்:

# சீர்காழி தொகுதியில் அமைச்சர் வீராசாமி தேர்தல் பிரச்சாரம்

சீர்காழி, டிச. 7- சீர்காழி தொகுதியில் அமைச்சர் வீராசாமி கழக வேட்பாளர் பாலசுப்பிரமணியத்தை ஆதரித்து தேர்தல் பிரச்சாரம் செய்தார்.

சீர்காழி சட்டமன்ற தொகுதியில் போட்டியிடும், கழக வேட்பாளர் பாலசுப்பிரமணியத்தை ஆதரித்து நடந்ததேர்தல் பிரச்சாரக் கூட்டத்தில் அமைச்சர் வீராசாமி பங்கேற்றுப் பேசினார்.

கூட்டத்தில் அமைச்சர் வீராசாமிபேசியதாவது:-

உங்கள் ஒவ்வொருவருடைய முகங்களையும் பார்க்கும்போது, சீர்காழி தொகுதி இப்பொழுதே கழகத்திற்குஒதுக்கப்பட்டுவிட்டதுநன்குதெரிகிறது. இங்குப் போட்டியிடுவது பாலசுப்பிரமணியம் அல்ல; அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம். எதிரே அமர்ந்திருக்கும் நீங்கள் ஒவ்வொருவரும் வேட்பாளர்கள் தான். என்ற நினைவில் செயல் பட்டு நமது கட்சிக்கு வெற்றி தேடித் தர வேண்டியது நமது கட்மையாகும்.

## சாதனை சரித்திரம்

சகோதரர் பாலசுப்பிரமணியன் இந்தத் தொகுதியின் வளர்ச்சிக்காகவும், முன்னேற்றத்திற்காகவும், சட்டமன்றத்திலே வாதாடி பல்வேறு பணிகளைச் செய்துள்ளார். அதிலே ஒன்றுதான் 2-கோடி செலவில் இந்தப் பகுதியில் அமையவிருக்கும் நவீன அரிசி ஆலையாகும்.

புரட்சித்தலைவர் அமெரிக்காவிலே சிகிச்சை பெற்று வருகிறார். புரட்சித்தலைவர் தமிழக முதல்வராகச் சென்றார். உடல்நலம் பெற்று தாயகம் திரும்பி வரும் போது தொடர்ந்து முதல்வராக இருக்க வேண்டும்.

நாட்டில் வாழும் ஏழை எளிய, பாமர மக்களுடைய நலனுக்காக, புரட்சித் தலைவர் தமிழகத்தின் முதல்வராக இருக்கவேண்டும்.

புரட்சித்தலைவர் அவர்களே பெருமிதப்படும் வகையில் போர்க்களத்திலே மார்பில் விழுப்புண்ணை ஏந்தும் வீரர்களைப்போலசெயல்பட்டு அவர்கள் திரும்பி வரும் போது தமிழகத்தின் முதல்வராக இருக்கச் செய்யவேண்டியது நமது கடமையாகும். மேலும் நாம் தோழமைக் கட்சிகளுடன் நன்குஇணைந்து செயல்பட வேண்டும்.

தமிழகத்தில் புரட்சித் தலைவர் அரசு அமைவது உறுதியாகும்.

இவ்வாறு அமைச்சர் வீராசாமி கூறினார்.

ஆண்டிப்பட்டியில் தேர்தல்பணிமனைகள்

## அமைச்சர் ராகவானந்தம் திறந்து வைத்தார்

சென்னை, டிச. 7- ஆண்டிப்பட்டி தொகுதி கடமலைக்குண்டு, கண்டமனூர் மற்றும், பல இடங்களில் அமைச்சர் ராகவானந்தம் தேர்தல் பணிமனைகளை திறந்து வைத்தார். அவருடன் தொழிற்சங்கப்பேரவைப் பொதுச் செயலாளர்வை. பெருமாள், பட்டுராஜன், பாண்டிதுரை, எஸ்.கே. பழனிச்சாமி, சுருளியப்பன், மற்றும்கூட்டணிக் கட்சித் தலைவர்களும், கழகத் தொண்டர்களும் ஏராளமான பேர் கலந்து கொண்டனர்.

—

## கழகஅணிக்கு அம்பேத்கார் முற்போக்கு இயக்கம் ஆதரவு

சென்னை. டிச. 7. அம்பேத்கார் மக்கள்முற்போக்கு இயக்கத்தின் பொதுச் செயலாளர் ஸ்ரீராமுலு, தலைவர் ஏ. கே. சாமி ஆகியோர் விடுத்துள்ள அறிக்கையில் கழகமுற்போக்குஅணிக்கு ஆதரவாக தேர்தலில் ஈடுபடுவதுஎன்று இயக்கம் முடிவுஎடுத்துள்ளதாக தெரிவித்துள்ளனர்.

மன்னை வேட்பாளர்

# கொட்டும் மழையிலும் கிராமம் கிராமமாக வாக்குக் கேட்டார்

தஞ்சை, டிச. 7- மன்னார்குடி கழக வேட்பாளர் ஞானசுந்தரம் கொட்டும் மழையிலும் கிராமம்கிராமமாகச் சென்று இரட்டை இலைச் சின்னத்திற்கு வாக்கு சேகரித்தார்.

மன்னார்குடிசட்டமன்ற கழகவேட்பாளராக போட்டியிடும் ஞானசுந்தரம் கிராமம் கிராமமாகச் சென்று தேர்தல் பிரச்சாரம் செய்து, இரட்டை இலைசின்னத்திற்கு வாக்களிக்குமாறு ஆதரவு கேட்டு வருகிறார்.

மன்னார்குடி பகுதியை புயல் காற்றும், மழையும் விடாது தாக்கிக் கொண்டிருந்த போதும், வேட்பாளர் ஞானசுந்தரம் கிராமம் கிராமமாகச் சென்று மக்களைச் சந்தித்து ஆறுதல் கூறினார்.

இயற்கை இடர்பாடுகளிலிருந்து மக்களைக் காப்பாற்றி வரும் புரட்சித் தலைவருக்கு ஆதரவளித்து, மேலும்சேவை தொடர்ந்திட வழி செய்யுமாறு ஞானசுந்தரம் வேண்டிக் கொண்டார்.

மேலநத்தம் அசேவும், மரவாக்காடு, இடையார் நத்தம், வள்ளூர்சமுதாயம் தருமக்கோட்டை, மாங்கோட்டைநத்தம், தச்சன் வயல், ராஜகோபாலபுரம் ஆகிய கிராமங்களுக்கு வேட்பாளர் ஞானசுந்தரம் சென்றபோது மக்கள் வரவேற்று வாழ்த்துக் கூறினர்.

### சண்முகம்

சோளிங்கர் சட்டமன்ற தொகுதியில் போட்டியிடும் கழக வேட்பாளர் சண்முகம் காவேரிப்பாக்கம், சுமைதாங்கி, சோளிங்கர், அம்மூர், கம்புகுளம், குடைக்கல் ஆகிய கிராமங்களில்இரவு பகலாகச்சென்றுமக்களை சந்தித்து வாக்குகள் கேட்டார்.

வேட்பாளர் சண்முகத்துடன் கே. ஆர். நரசிம்மன், டி. மாரிமுத்து, சந்தானம், எஸ்.ராஜேந்திரன், துரைசாமி, பாலு, மணி, வரதன், அக்பர் மற்றும் பலர் சென்றனர்.

### கிருஷ்ணசாமி

அணைக்கட்டு சட்டமன்றத் தொகுதியில் போட்டியிடும் கழக வேட்பாளர் இரா. கிருஷ்ணசாமி பெருமழையிலும் கிராமம் கிராமமாகச் சென்று புரட்சித்தலைவரின் இரட்டை இலை சின்னத்திற்கு ஆதரவு திரட்டினார்.

அணைக்கட்டு தொகுதியில் உள்ளசாயிநாதபுரம், விருபாட்சிபுரம். பாகாயம், இடையம்பட்டி, மூஞ்சூர்பட்டு, ஆற்காட்டான் குடிசை, மலைக்கோடி, அரியூர், சேக்கனூர், புலிமேடு, குடிசை, மூலைக்கேட், ஆகிய ஊர்களில் வீடுவீடாகச்சென்று இரட்டை இலைச்சின்னத்திற்கு வாக்களிக்கும்படி கேட்டுக் கொண்டார்.

வேட்பாளர் கிருஷ்ணசாமியுடன் எஸ். சண்முகம், சுப்பிரமணி, ஜலீல்கான், குமாரசாமி, கே. பாண்டியன், ஆகியோரும் சென்றனர்.

## தஞ்சை கம்யூனிஸ்ட் கூடாரம் காலியாகிறது

தஞ்சை மாவட்டம் திருத்துறைப்பூண்டி ஒன்றியத்தில் சாத்தாங்குடி கிராமத்தை சேர்ந்த 50 இந்திய கம்யூனிஸ்டுகள் ஸ்டாலின், மாரிமுத்து, பன்னீர், ஜெய்சங்கர் தலைமையில் கழகத்தில் இணைந்தனர். நாகை நாடாளு மன்ற வேட்பாளர் மகாலிங்கம், திருத்துறைப்பூண்டி சட்டமன்ற வேட்பாளர்களும் உதயகுமார், அர்ஜுனன், ஒன்றியச் செயலாளர் மணி இளைஞர் அணியினர் பாபி சந்திரசேகரன், வி. முருகேசன், எம். வெங்கடாசலம் உள்ளிட்ட பலர் உடனிருந்தனர்.

தொடக்கபள்ளி ஆசிரியர்

## கூட்டணி மாநாடு

சென்னை. டிச. 7- இந்த மாநாடு இம்மாதம் 9ம் தேதி சென்னையில் நடைபெறுகிறது.

தமிழ்நாடு தொடக்கப் பள்ளி ஆசிரியர் கூட்டணியின் சார்பில் மாநிலபிரதிநிதிகள் கோரிக்கை மாநாடு இம்மாதம் 9-ந்தேதி ஞாயிறு அன்று ஆபட்ஸ்பரி மண்டபத்தில் நடைபெறுகிறது.

மாநாட்டிற்கு மாநிலத் தலைவர் ஜே.எஸ்.இராசு தலைமை வகிக்கிறார்.

தமிழகம் முழுவதும் மொத்தம்420 கிளைகளில் இருந்து4200பிரதிநிதிகள் இந்த மாநாட்டில் பங்கேற்கின்றனர்.

இந்தமாநாட்டில் கல்வி அமைச்சர் அரங்கநாயகம் கலந்து கொண்டு உரையாற்றுகின்றார்.

மாநாட்டில் தமிழ்நாடு இந்திரா காங்கிரஸ் தலைவர் கே. பழனியாண்டி உட்பட அனைத்துக்கட்சித் தலைவர்களும் பங்கேற்று உரையாற்றுகின்றனர்.

# நாமக்கல் தொகுதி: அருணாசலம் ஓட்டு சேகரிப்பு

சேலம், டிச. 7- நாமக்கல் சட்டமன்றத் தொகுதியில் போட்டியிடும் அமைச்சர்அருணாசலம் தீவிர ஓட்டு சேகரிப்பில் ஈடுபட்டார்.

நாமக்கல் ரங்கர் சன்னதி தெருவில் ரங்கநாதர் கோயில் அடிவாரத்தில் நாமக்கல் தொகுதி தலைமைத் தேர்தல் அலுவலகம் திறந்து வைக்கப்பட்டது.

சட்டமன்ற வேட்பாளரும், அமைச்சருமான இரா. அருணாசலம் தலைமையில் நடைபெற்றஇத்திறப்பு விழாவில் வழக்கறிஞர் எம். என். சீனிவாசன், நாமக்கல் ந. சந்திரசேகர், பி. பி. சாமி, ஏ.சி.எஸ்.சுந்தரம் முன்னாள் எம். எல். சி. பாலு ஆகியோர் சிறப்புரையாற்றினர்.

நாமக்கல் எம்.ஜி.எம் தியேட்டரில் தேர்தல் பணி குறித்த ஆலோசனைக் கூட்டம் நடைபெற்றது.

வேட்பாளர் அமைச்சர் அருணாசலம் நாமக்கல் நகரிலும் கிராமங்களிலும் அனைவரையும் சந்தித்து ஆதரவு திரட்டினார்.

## அமெரிக்க கம்பெனி அதிபர் மகன் கைது

போபால், டிச. 7, போபாலில். விஷமருந்து கம்பெனி குழாயிலிருந்து விஷவாயுகசிந்து காற்றில் கலந்தால் 600 பேர் இறந்துள்ளனர் அல்லவா? "யூனியன்கார்பைடு, என்ற இந்த பன்னாட்டு நிறுவனத்தின் தலைவர் வாரன் ஆண்டர்சன்" விபத்துபற்றி கேள்விப்பட்டு அவர் அமெரிக்காவிலிருந்து இன்றுகாலை போபாலுக்கு வந்தார். விமான நிலையத்தில் அவரை போலீசார் கைது செய்தனர்.

வெளிநாடுகளில் இளம்

# பத்திரிகையாளர் 40 பேர்களுக்கு சிறப்புப் பயிற்சி

### இந்திய உழைக்கும் பத்திரிகையாளர் சம்மேளனம் ஏற்பாடு

பெங்களூர், டிச. 7- இளம் பத்திரிகையாளர்கள் நாற்பது பேர்களுக்கு வெளிநாடுகளில் பல்வேறு சிறப்புப் பயிற்சி அளிக்கும் திட்டத்திற்கு இந்திய உழைக்கும் பத்திரிகையாளர் சம்மேளனம் ஏற்பாடு செய்துள்ளது.

இதுகுறித்து சம்மேளனத்தலைவர் விக்ரம்ராவ் கூறியதாவது:-

இந்தியாவில் உள்ள இளம் பத்திரிகையாளர்களுக்கு வெளிநாடுகளில் சிறப்பு முன்னோடிப் பயிற்சி திட்டம் ஒன்றை இந்திய உழைக்கும் பத்திரிகையாளர் சம்மேளனம் வகுத்துள்ளது.

இத்திட்டத்தின்படி 40 இளம் பத்திரிகையாளர்கள் அடுத்த ஆண்டு பல ஐரோப்பிய நாடுகளில் பயிற்சி பெறுவார்கள்.

இத்திட்டத்தின் முதல் கட்டமாக முதல்பிரிவினர் இவ்வாண்டு இறுதியில் பெர்லினுக்கும், புடாபெஸ்டுக்கும் செல்வார்கள்.

இத்தகைய பயிற்சித் திட்டத்திற்குசம்மேளனம் சோவியத்யூனியன், கியூபா ஜெர்மன், ஜனநாயகக் குடியரசு சர்வதேச பத்திரிகையாளர் அமைப்பு ஆகியவைகளுடன் ஒப்பந்தம் செய்துள்ளது.

இதுபோன்ற ஒப்பந்தம் லட்டீன் அமெரிக்கா அரபு நாடுகள், மெக்சிகன், வட கொரியா, பல்கேரியா, ருமேனியா, நிகராகுவாமங்கோலியா முதலிய நாடுகளுடன் ஏற்படும்.

உடுமலைநாராயணகவி

## இவர்களுக்காகவே பாடினாரோ?

# பொய் பொய்யா சொன்னாலும்...!

குருட்டுக்கழுதை கூட ஒருமுறை முட்டிக்கொண்ட பாறையில் மறுமுறை முட்டிக்கொள்ளாது என்று ராமகிருஷ்ணபரமஹம்சர் சொன்னதாக நினைவு.

**மு. ஒலியின் குருட்டுத்தனம் எல்லை மீறிப் போய்க் கொண்டிருக்கிறது.**

அமெரிக்காவில் எடுக்கப்பட்ட புரட்சித்தலைவரின் படத்தை மு. ஒலியும் வெளியிட்டு இருக்கிறது.

**அந்தப் படத்தில் அவர் இல்லை - இவர் இல்லை என்று சந்தேகப்பிறவி உரக்கக் குரைத்து இருக்கிறது.**

"டாக்டர் பி. ஆர். சுப்பிரமணியமும் பட்த்தில் இல்லை" என்று மு. ஒலி முதல் பக்கத்தில் கூறியிருக்கிறது. சாட்சிக்கு வேறு பத்திரிகை வேண்டாம்.

மு. ஒலி வெளியிட்டு இருக்கும் முதற்பக்கப் பட்த்திலேயே திருமதி ஜானகிஅம்மையாருக்குப் பின்னால் டாக்டர் பி. ஆர். சுப்பிரமணியம் நிற்கிறார்!

**அதுமட்டுமல்ல - அமெரிக்காவில் வாழும் - தமிழ்ச் சங்கத்தலைவர் - டாக்டர் பெரியசாமியும் படத்தில் இருக்கிறார்.**

'காமாலைக் கண்ணுக்கு கண்டதெல்லாம் மஞ்சள்' என்பார்கள். சந்தேகப் பிறவிகளுக்கு எல்லாமே சந்தேகம். தான் திருடி பிறரை நம்பாள்.

**புரட்சித்தலைவரின் படம் வெளியிடப்பட்டதால், கருணாநிதியின் கூடாரம் கலகலத்துப் போயிருக்கிறது.**

வேளைக்கொரு பொய் சொல்லி மக்களை ஏமாற்ற முடியாமல் தன்னை ஏமாற்றிக் கொள்கிறார் கருணாநிதி.

**"பொய் பொய்யா சொன்னாலும் பொருத்தமா சொல்லுங்கடா அட! போக்கத்த பசங்களா?"**

-என்ற உடுமலைநாராயணகவி பாடல்தான் நமக்கு நினைவுக்கு வருகிறது,

**உடுமலையார் இவர்களுக்காகவே பாடினாரோ?**

-கா

தலைமைக் கழக அறிக்கை

## தென் சென்னை நாடாளுமன்றக் கழகத் தோழர்களுக்கு...

தென் சென்னை நாடாளுமன்றத் தொகுதி தேர்தல் பணி பொறுப்பாளராக தலைமைக் கழகத்தின் சார்பாக

திரு. டி. கே கபாலி அவர்கள் நியமிக்கப்பட்டுள்ளார்.

கழகத் தோழர்கள் மற்றும் சார்பு மன்றத் தோழர்கள் அனைவரும் அவருடன் தொடர்பு கொண்டு இணைந்து பணியாற்றிட கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

- தலைமைக் கழகம்
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

சென்னை-14
7-12-84

தலைமைக் கழக அறிக்கை

## ஆந்திர-கர்நாடக மாநிலக் கழகத் தோழர்களுக்கு

ஆந்திர-கர்நாடக மாநிலங்களிலிருந்து கழகத் தோழர்கள் தலைமைக் கழகத்திற்கு நேரில் வந்து ஆலோசித்ததன் பேரில், ஆந்திர - கர்நாடக மாநிலங்களில் உள்ள அனைத்து தொகுதிகளிலும் தோழமைக் கட்சியான இந்திரா காங்கிரஸ் கூட்டணி வேட்பாளர்களை ஆதரிப்பதென முடிவு செய்யப்பட்டுள்ளது.

தலைமைக் கழகம்,
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

சென்னை-14,
7-12-84.

தலைமைக் கழக அறிக்கை

## சென்னை மாவட்டம், சேப்பாக்கம் தொகுதிக் கழகத் தோழர்களுக்கு...

சென்னை மாவட்டம், சேப்பாக்கம் சட்டமன்றத் தொகுதி தேர்தல் பணி பொறுப்பாளராக தலைமைக் கழகத்தின் சார்பில்

திரு. என். வி. என். செல்வம் அவர்கள் நியமிக்கப்படுகிறார்.

சேப்பாக்கம் தொகுதி குட்பட்ட அந்தந்த வட்டச் செயலாளர்கள் பொறுப்பில் அந்தந்த வட்டத்திற்குட்பட்ட அனைத்து அணிகளையும் சேர்ந்த தேர்தல் பணிக் குழுக்கள் பணியாற்றும்.

கழகத் தோழர்கள் மற்றும் சார்பு மன்றத்தோழர்கள் அனைவரும் அவர்களோடு தொடர்பு கொண்டு இணைந்து பணியாற்றிட கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

தலைமைக் கழகம்
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

சென்னை-14,
7-12-84

துறைமுகம் தொகுதி

## சட்டமன்ற தேர்தல் பணிமனை திறப்பு விழாவும் பேரறிஞர் அண்ணாசிலை திறப்பு விழாவும் தேர்தல் பணிமனை திறப்பு

தலைமை:
M. V. இராமன்,
(பகுதி செயலாளர்)

முன்னிலை:
M. S. மணி, S. S. ராஜேந்திரன்
A. K. பீர்முகமது

காலம்: 7-12-84 மாலை 6 மணி
இடம்: 120, தம்புச்செட்டித் தெரு,
சிலை திறப்பு:

தலைமை: M. A. ஆனந்தன்,
காலம்: 7-12-84 மாலை 8 மணி
இடம்: சிவஞானம்பூங்கா அருகில் (46வதுவட்டம்)
பேசுவோர்:
T. K. கணேசன், J. கிருபாகரன்,
திறப்பாளர்: மாண்புமிகு அமைச்சர்
**ஆர். எம். வீ. அவர்கள்**

பங்கு கொள்வோர்:
துறைமுகப்பகுதி சட்டமன்ற வேட்பாளர்
கே. லியாகத்அலிகான் B. A. B. L.,
ஜேப்பியார் M.L.C., இ. மதுசூதனன் M.L.C.,
மண்ணடி கிருஷ்ணமூர்த்தி
M. A. காதர், கு. கஜேந்திரபாபு, N. A. துரை, V. K. கபூர், K. எல்லப்பன், M. P. ஜியாவுதீன், N. யுவராஜ், P. ராஜேந்திரசோழா, M.A. ராஜ்குமார் துறைமுகம் S. லட்சுமி.
நன்றி: கே. தாமோதரன்

மற்றும் மாவட்ட பிரதிநிதி, மேலமைப்பு பிரதிநிதி, எம்.ஜி.ஆர். இளைஞர் அணி, மாணவர் அணி, மகளிர்அணி, முற்போக்கு ஜனநாயக கூட்டணியைச் சேர்ந்தஅனைவரும் கலந்துகொள்வார்கள்.

# புரசைத் தொகுதியில் சுப்புவுக்கு மக்கள் உற்சாக ஆதரவு

## இரட்டை இலைக்கே எங்கள் வாக்கு என தாய்மார்கள் உறுதி

**சென்னை, டிச. 7- சென்னை புரசைவாக்கம் தொகுதியில் போட்டியிடும் சுப்புவுக்கும், தோழமைக் கட்சி வேட்பாளரான எர்னஸ்ட் பாலுவுக்கும் மக்கள் உற்சாக வரவேற்பு அளித்து தங்கள் ஆதரவைத் தெரிவித்து வருகிறார்கள்.**

சென்னை புரசைவாக்கம் சட்டமன்ற தொகுதிகழகவேட்பாளர் க. சுப்பு தொகுதியில் பல்வேறு பகுதிகளுக்கும் சென்று வாக்காளர்களை சந்தித்த போது அவருக்கு மக்கள் உற்சாக வரவேற்பு அளித்தனர்.

28வது வட்டம் ராகவாச்சாரி தெருவில் இருந்து பெரம்பூர் பேப்பர்மில்ஸ் சாலையில் உள்ள காந்திஜி நினைவுப் பள்ளிக் கட்டிடத்திற்கு சுப்பு ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டார்.

ஊர்வலத்தில்ஏராளமானவர்கள் கலந்து கொண்டனர். ஊர்வல முடிவில் நடந்த கூட்டத்தில் டார்பட்டோ ஜனார்த்தனம், தரங்கை கண்ணன் மற்றும் வட்டச் செயலாளர்கள் தோழமை கட்சியினர் பங்கேற்றனர்.

கூட்டத்தில் சுப்பு, எர்னஸ்ட்பால் ஆகியோர் பேசினர்.

பின்னர் திரு. வி. க. நகருக்கு சுப்பு சென்ற போது ஏராளமான தாய்மார்கள் வரவேற்று எங்கள்வாக்கு 'இரட்டை இலைக்கே' என உறுதி கூறினர்.

### தேர்தல் அலுவலகம் திறப்பு

அயனாவரம் ஜாயிண்ட் ஆபீஸ் அருகில் இளைஞர் காங்கிரஸ் சார்பில் தேர்தல் அலுவலகத் திறப்பு விழா நடைபெற்றது.

இதில் வெற்றிவேல், பாலசுப்பிரமணியம், கோவிந்தராசன், குரலரசு கோவிந்தராசன் ஆகியோரும் சுப்புவும் பங்கேற்றனர்.

38-வது வட்டத்தில் நடந்த செயல் வீரர்கள் கூட்டத்தில் புரசைத்தொகுதி கழக தேர்தல் பொறுப்பாளர் ஏ, செல்லையா, க. சுப்பு ஆகியோரும் மற்றும் தோழமைக் கட்சியினரும் பங்கேற்றனர்.

இன்று (7-ந்தேதி) காலை 7 மணி முதல் 19ந் தேதி வரை வேட்பாளர் சுப்புவும் மற்ற கழகமுற்போக்கு அணியினரும் ஒவ்வொரு வட்டமாகச்



சென்று வாக்காளர்களை சந்தித்துத் தேர்தல் பிரச்சாரம் செய்கின்றனர்.

விவரம் வருமாறு:-

7-ந் தேதி 28-வது வட்டம்
8 29-வது வட்டம்
9 30-வது வட்டம்
10 31-வது வட்டம்
11 40-வது வட்டம்
12 35-வது வட்டம்
13 36-வது வட்டம்
14 37-வது வட்டம்
15 38-வது வட்டம்
16 சைக்கிள் ஊர்வலம்
17 34-வது வட்டம்
18 41-வது வட்டம்
19 39-வது வட்டம்

### அமைச்சர் அண்டே நிகழ்ச்சிகள்

டிச. 8-காலைசென்னை-கிண்டி-ராஜாஜி பிறந்த நாள் விழா. காலை முதல் மாலைவரை சென்னை மயிலை தொகுதி. இரவு, சென்னை - அண்ணா நகர் தொகுதி எம்.எம்.டி.ஏ. காலனி பொதுக்கூட்டம்.

டிச. 9-காலைசென்னை சைதை தொகுதி. இரவு, காஞ்சிபுரம் பொதுக் கூட்டம்.

டிச. 10,11- வேலூர் நாடாளுமன்றத்தொகுதி.

டிச. 12- காலை கோவை மற்றும் தொண்டாமுத்தூர் தொகுதிகள்.

டிச. 13- பிற்பகல் கோவை கிழக்குதொகுதி. இரவு, திருச்செங்கோடு தொகுதி-பொதுக்கூட்டம்

டிச. 14, 15- சென்னை

டிச. 16- கண்டமங்கலம் பண்ருட்டி தொகுதி

டிச. 17, 18- தர்மபுரி மாவட்டம்.

டிச. 19- சென்னை

டிச. 20- ஸ்ரீரங்கம்

டிச. 21- சென்னை புரசைவாக்கம்

டிச. 22- சென்னை துறைமுகத் தொகுதி

---

தமிழ்நாடு முஸ்லிம்லீக்

பொதுச்செயலாளர்

### செய்குத்தம்பி நிகழ்ச்சிகள்

டிச. 10- ஆற்காடு-வேலூர்
11- பேரணாம்பட்டு
12- சேலம்
13- -ஏற்காடு
14- -கோவை
15- மதுரை
16- தூத்துக்குடி, மேலப்பாளையம்
17- கன்னியாகுமரி
18- கடையநல்லூர்
19- மதுரை
20- பண்ருட்டி-நெல்லிக்குப்பம்
21- சென்னை

### மதுராந்தகத்தில் தேர்தல் தள்ளிவைப்பு இல்லை

புதுடெல்லி, டிச. 7. மதுராந்தகம் சட்டசபை தொகுதியில் தங்களுக்கு ஒதுக்கப்பட்ட தேர்தல் சின்னங்களைசிலவேட்பாளர்கள் பெறமறுப்பதால் அங்கு தேர்தலை தள்ளி வைக்கும் பேச்சுக்கே இடமில்லை என்று தேர்தல் கமிஷன் செயலாளர் தெரிவித்துள்ளார். அங்குதிட்டமிட்டபடி டிசம்பர் 24ந் தேதி வாக்குப்பதிவு நடைபெறும் என்றுஅவர்தெரிவித்தார்.

### வேலூர்

வேலூர் நாடாளுமன்ற தொகுதியில் அடங்கிய காட்பாடி, குடியாத்தம், ஆரணி, பேரணாம்பட்டு, அணைக்கட்டு, வேலூர், ஆகிய சட்டமன்ற தொகுதிகளில் கழக முற்போக்கு அணியினர் ஆலோசனைக்கூட்டம் நடந்தது. மேற்படி கூட்டங்களில் அந்தந்தத் தொகுதிவேட்பாளர்களும் மற்றும் நாடாளு மன்ற வேட்பாளர் ஏ. சி. சண்முகம் மற்றும் கழக முற்போக்கு முன்னணியினர் பங்கேற்றனர் கழக அணி வேட்பாளர்கள் வெற்றிக்கு தீவிரமாக எந்தெந்த வகையில் உழைப்பது என்பது குறித்து ஆலோசிக்கப்பட்டது.

### தங்கபாலு அறிக்கை

தமிழ்நாடு இளைஞர் காங்கிரஸ் தலைவர் தங்கபாலுவெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில் கூறியுள்ளதாவது:-

வடசென்னையில் தேர்தல் பணிகளை கவனிக்க இளைஞர் காங்கிரசைச் சேர்ந்த சக்திவேல், சரஸ்வதி, ரங்கநாதன், வெங்கடேசன், மூல்சந்த், வெற்றிவேல் ஆகியோரும், தென் சென்னைக்கு போரூர் வரதன், சூரியபிரகாஷ், நல்லதம்பி, திருமாறன், பழனிச்சாமி, ஆகியோர் நியமிக்கப்பட்டுள்ளனர். வடக்குசெங்கல்பட்டு மாவட்டத்துக்கு புதூர் வேணுகோபால், லதா-பிரியகுமார், பலராமன் மற்றும் தெற்கு செங்கல்பட்டுக்கு சாந்தகுமாரி, பாலன், கத்திபாராஜனார்த்தனம், டாக்டர் ஞானமணி, அருள்தாஸ், விநோத்ராஜ் ஆகியோர் நியமிக்கப்பட்டுள்ளதாக அந்த அறிக்கையில் தங்கபாலு கூறியுள்ளார்.

## தேர்தல் களத்தில்

### சேப்பாக்கம்

சேப்பாக்கம் தொகுதி 93வதுவட்டத்தில் மகளிர் அணி ஆலோசனைக் கூட்டம் நடைபெற்றது. வேட்பாளர் மாரிமுத்துவும், இந்தக் கூட்டத்தில் பங்கேற்றார்.

### அரூர்

அரூரில் நாடாளுமன்ற வேட்பாளர் தம்பிதுரை, சட்டமன்ற வேட்பாளர் ராஜமாணிக்கம்ஆகியோர் அறிமுக கூட்டம் இன்று நடைபெற்றது. கழக முற்போக்கு அணியினர் பலர் பங்கேற்றனர்.

### சைதையில் தி. மு. க. சரிந்தது

சைதைத் தொகுதி 147வது வட்டம் மடுவின் கரை பகுதி திமுக இளைஞர் அணிச் செயலாளராக இருந்த தனசேகர், துணைசெயலாளர் வெங்கடேசன் ஆகியோர் 25பேர்களுடன் அமைச்சர் ஆர். எம். வீ. முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

### தென்னவன்-லதா கலை நிகழ்ச்சி

டிச, 8- சீர்காழி
9, 10- மன்னார்குடி
11 - ஒரத்தநாடு
12- திருவெறும்பூர்.
13, 14- திருவரங்கம்
15- நாமக்கல்
16- சேந்தமங்கலம்
17- ஒட்டன் சத்திரம்
18, 19- சிவகாசி
20- வலங்கைமான்
21, 22- திருவையாறு

### உறக்கம் வேண்டாத பிரதமர்

தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபட்டுள்ள பிரதமர் ராஜீவ் ஊண், உறக்கம், ஓய்வின்றி இரவு பகலாக சுற்றிச் சுற்றி வந்த வண்ணம் இருக்கிறார்.

புதன்கிழமை அதி காலை (இரவு) 3 மணிக்கு டெல்லிக்குத் திரும்பிய பிரதமர் ராஜீவ் விடி காலை 4.30 மணி வரை தனது உதவியாளர் அலெக்சாண்டருடன் முக்கியமான ஆலோசனையில் ஈடுபட்டார் பின்னர் உடனடியாக நேராக விமான நிலையத்திற்குச் சென்று அடுத்த நாள் பிரச்சாரத்திற்குப் பயணமானார்.

### கழக அணிக்கு குடியரசுகட்சி ஆதரவு

கழக முற்போக்கு அணிக்கு அகில இந்திய கிறிஸ்துவ குடியரசுக்கட்சி தனதுஆதரவைத்தெரிவித்துள்ளது. அக்கட்சியின் மாநில செயற்குழு கூட்டத்தில் இந்த முடிவுமேற்கொள்ளப்பட்டதாக மாநில பொதுச் செயலாளர் மார்க்பிரஸ் தெரிவித்துள்ளார்.

### மன்னார்குடி

மன்னார்குடி சட்டமன்ற வேட்பாளராகப் போட்டியிடும் ஞானசுந்தரம் தனது தொகுதியில் வீடுவீடாகச் சென்றுவாக்காளர்களைச் சந்தித்து வருகிறார். கழக முற்போக்கு அணி வேட்பாளர் ஞானசுந்தரத்தை வெற்றி பெறச் செய்ய கழக முற்போக்கு அணியினர் பம்பரமென சுழன்று பணியாற்றிவருகின்றனர்.

காங் வேட்பாளர்

### எம். ஜோதி ஓட்டுவேட்டை

பூங்காநகர்இ. காங்கிரஸ் வேட்பாளர் எம். ஜோதி. நேற்று யானை கவுனி பகுதியில் வீடு வீடாகச் சென்று ஆதரவு திரட்டினார்.

நாளையும் புளியாந்தோப்பு பகுதியில் ஆதரவு கேட்கிறார்.

116 வது வட்ட

### தேர்தல் பணிக்குழு

116 வது வட்டத்தில் கழக தேர்தல் பணிக்குழு அமைக்கப்பட்டது. தலைவராக வேட்பாளர் சவுரி ராஜனும், செயலாளராக து. மதிவாணனும், பொருளாளராகது. கோவிந்தராஜ் ஆகியோரும் நியமிக்கப் பட்டனர். தணிக்கைக் குழு தலைவராக ஆ. ஜெயபாலனும், உறுப்பினர்களாக சைதை பாபு, சிட்டிபாபு, தாஜா, ரங்கசாமி ஆகியோரும் நியமிக்கப்பட்டனர்.

### கல்வீச்சில் வாஜ்பாயி படுகாயம்

ஆமதாபாத், டிச. 7. குஜராத்தில் மேசனா மாவட்டத்தில் நந்தசன் கிராமத்தில் தேர்தல் பிரச்சாரம் செய்யச் சென்ற பாரதியஜனதாத் தலைவர் வாஜ்பாயி கல்வீச்சில் படுகாயம் அடைந்தார்.